REGD. No. TN-MS (C) 244 ❋ ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 42021 8 பக்கம் விலை 40 காசு



**மேதை**

சிலர்தான் படிக்காமலே மேதை ஆக முடியும். அனைவருமே மேதையாக வேண்டுமென்றால், படிக்காமல் இருக்கவேண்டுமென்று பொருள் கொண்டுவிடக் கூடாது.

— பேறிஞர் அண்ணா




**தொண்டன்**

எந்தவித சுய நன்மையும் அடையாமல், உண்மையாக தொண்டுக்காக வாழ்பவனே தொண்டனாவான்.

— தந்தை பெரியார்



● மலர்: 6 சென்னை 13—1—1982 புதன் வெளியூர் 14—1—1982 வியாழன் இதழ்: 86 ●

# பாவம், பழைய நாட்டாண்மை!

ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு நாட்டாண்மைக்காரர். என்ன, கதையா என்று யோசிக்கிறீர்களா? ஆமாம் கதைதான். எந்த ஊரில்? எந்த நாட்டாண்மைக்காரர் என்றெல்லாம் கேட்டுத் துளைத்தெடுக்காதீர்கள்; கதையை மட்டும் கவனமாகப் படியுங்கள்.

கருணாமூர்த்தியென்று, கிராமத்துக்கே நிதி என்று தனக்குத்தானே தம்பட்டமடித்துக் கொண்டிருந்த ஒருவர் அந்த ஊரில் நாட்டாண்மைக்காரராக இருந்தார்.

ஊரில் இருக்கிற ஏழை, எளிய மக்களையெல்லாம் கொத்தடிமைகளாக்கி; அவர்களை மாடுகளைவிடக் கேவலமாக உழைக்கவைத்து இவர் உண்டு கொழுத்தார்.

அது போதாதென்று அடுத்தவர்கள் வயல்களில் விளைவதையெல்லாம் இவர் திருடினார்.

"அதற்குப் பணம் கொடுங்கள், இதற்குப் பணம் கொடுங்கள்" என்றெல்லாம் கிராம மக்களை அரித்துப் பிடுங்கினார்.

ஊரை அடித்து உலையில் போடும் அந்த நாட்டாண்மையின் கொடுமை தாங்காத அந்தக் கிராமத்து மக்கள்; இதற்கொரு முடிவுகட்ட ஆரம்பித்தனர்.

ஒருநாள் அந்தக் கிராமத்து மக்கள் அனைவரும் ஓரிடத்தில் ஒன்றாகக் கூடினார்கள்.

நாட்டாண்மைப் பொறுப்பிலிருந்து அவரை

## புலிகேசி

அதாவது அந்தக் கருணாமூர்த்தியை நீக்குவதென்று ஏகமனதாக முடிவு செய்து நீக்கியும் விட்டார்கள்.

அவருக்குப் பதிலாக உத்தமர் ஒருவரை நாட்டாண்மைப் பொறுப்பில் அமர்த்தினார்கள்.

சொன்னையடித்துக் கொழுத்துப்பழகிய பழைய நாட்டாண்மைக்காரருக்குப் பற்றிக்கொண்டு வந்தது.

மக்கள் சக்திக்கு மதிப்பளிக்காமல் மடிப்பிச்சை பேர்த்திகள் சிலரைத் தம்முடன் வைத்துக் கொண்டு இல்லாண்டித்தனங்களைச் செய்ய ஆரம்பித்தார்.

ஒழுங்காக இருந்த கிராமத்தில் நாளொரு புளுகையும், பொழுதொரு பொய்யையும் அவிழ்த்து விட்டுக்கொண்டே வந்தார்.

புதிய நாட்டாண்மைக்காரர் மீது வீண்பழிகளை அளவில்லாமல் சுமத்திக் கொண்டே வந்தார்.

பழைய நாட்டாண்மை சும்மா 'புருடா' தான் விடுகிறார் எனப் புரிந்து கொண்ட அந்த மக்கள், அவர் அப்படிப் பிரச்சாரம் செய்வதை வேடிக்கை தான் பார்த்தார்களே தவிர; விளையாட்டுக்குக்கூட நம்பவில்லை.

அதனால்; ஆத்திரம் மிக அடைந்த பழைய நாட்டாண்மை அந்தக் கிராமத்தில் பல ஆகாத காரியங்களைச் செய்யத் தொடங்கினார்.

தனக்கு ஆகாதவர்களின் வீடுகளில் தனது அடிபிடிகளை விட்டுத் திருடவைத்தார்.

தனக்கு ஆகாதவர்களின் நிலங்களில் பயிர்களை அழித்தார்.

தனக்கு ஆகாதவர்களின் பம்புசெட் கிணறுகளில் மோட்டாரைத் திருடினார்.

தனக்கு ஆகாதவர்களின் வீடுகளுக்குத் தீயும் வைத்தார்.

பழிவாங்கும் திட்டத்தில் பழைய நாட்டாண்மைதான் இந்த வேலைகளைச் செய்கிறார் என்பது ஊருக்குத் தெரிந்தாலும்; கையும் களவுமாகப் பிடிக்கக் காத்திருந்தனர்.

அந்த நாளும் வந்து பழைய நாட்டாண்மையும் பிடிபட்டார்.

ஒருவரது வாழைத்தோட்டத்தில் புகுந்து வாழை மரங்களை வெட்டி வீழ்த்திக் கொண்டிருந்தபோது பழைய நாட்டாண்மையும், அவரது அடியாட்களும் கையும் களவுமாகப் பிடிபட்டார்கள்.

அவர்கள் கையிலிருந்த அரிவாள்கள் மக்களால் கைப்பற்றப்பட்டன.

இதுகுறித்து, புதிய நாட்டாண்மை பஞ்சாயத்து ஒன்றில் புகார் செய்தார். அந்தப் புகாரை விசாரிக்க ஒரு நீதிமானை அந்தப் பஞ்சாயத்து நியமித்தது.

விசாரணை நடந்தால்—தான் குற்றவாளி என்பது நிரூபிக்கப்பட்டுவிடும் என்று பயந்த பழைய நாட்டாண்மை "ஐயோ இந்த மனிதர் விசாரிக்கக்கூடாது; இவர் புதிய நாட்டாண்மையைப் போலவே வேட்டி சட்டை போட்டிருக்கிறார்" என்றார்.

பழைய நாட்டாண்மையின் இந்தக் கோமாளித்தனத்தை எண்ணிச் சிரித்த பஞ்சாயத்து வேறு ஒரு நீதிமானை அனுப்பியது.

உடனே பழைய நாட்டாண்மை; "ஐயய்யோ... இவரும் விசாரிக்கக்கூடாது. புதிய நாட்டாண்மையைப்போல இவரும் சிவப்பாக இருக்கிறார்" என்றார்.

இவரது பைத்தியக்காரத்தனத்தைப் பார்த்த பஞ்சாயத்துத் தலைவர், "அட சரிதான் வாயை மூடுய்யா!" என்று அடக்கி விசாரணை நடத்த உத்தரவிட்டார்.

"நான் வாழை மரங்களை வெட்டவில்லை" என்று பழைய நாட்டாண்மை விசாரணையின்போது கூறினார்.

"இல்லை, இல்லை வெட்டினார்" என்று நேரில் பார்த்த கிராம மக்கள் சாட்சியமளித்தனர்.

வாழை மரங்களை வெட்டுவதற்கு அவர் வைத்திருந்த அரிவாளை அடையாளம் காட்டினர்.

அரிவாளை வைத்திருந்தது உண்மை என்று ஒப்புக் கொண்ட நாட்டாண்மைக்காரர்; "இளநீர் வெட்டுவதற்கு அரிவாள் வைத்திருந்தேன்" என்றார்.

"வாழைமரத்திலா இளநீர் இருக்கிறது?" என்று நீதிமான் கேட்டதும் கூடியிருந்த அனைவரும் 'குபீர்' என்று சிரித்து விட்டனர். இதைப் பார்த்த பழைய நாட்டாண்மையின் முகத்தில் ஒரு பக்கெட் அசடு வழிந்தது.

நீதிமானின் விசாரணையில் தமது குற்றம் நிரூபணமாகும் என்பது பழைய நாட்டாண்மைக்குத் தெரியுமாதலால் விசாரணையில் குழப்பம் ஏற்படுத்த முயற்சி செய்தார்.

விசாரணை மண்டபத்துக்குத் தனது அடியாட்களில் ஒருவரை அனுப்பி, நீதிமானை அவமதித்துப் பேச வைத்தார்.

நீதிமானைப்பற்றி பல அவதூறுகளைப் பரப்பினார்.

இதற்குப் பயந்து அந்த நீதிமான், தாமாகவே விசாரணை செய்வதிலிருந்து விலகிக் கொள்வார் என்று பழைய நாட்டாண்மை எதிர்பார்த்தே இப்படியெல்லாம் செய்தார்.

ஆனால் நீதியை நிலைநாட்ட வேண்டி, அந்த நீதிமான் தொடர்ந்து விசாரணையை நடத்தினார்.

இறுதிநாள் விசாரணையின் போது பழைய நாட்டாண்மை ஒரு 'மாதிரியாக' வந்து அங்கு உட்கார்ந்தார்.

கூடியிருந்த அனைவரும், ஒரு கொள்ளைக்காரனை பார்ப்பது போல அவரைப் பார்த்தனர். சிலர் காதோடு காதாக ஏதேதோ கிசுகிசுத்துக் கொண்டனர். இன்னும் சிலர் இவரைப் பார்த்து இளக்காரமாகச் சிரித்தனர்.

இதையெல்லாம் கவனித்துக்கொண்டிருந்த பழைய நாட்டாண்மைக்கு என்னவோ செய்தது.

திடீர் என்று எழுந்தார்;

விசாரணை வேண்டாம் என்றார்;

கையைக் காலை ஆட்டினார்;

அங்கும், இங்கும் ஓடினார்.

"சர்க்கரை, கோதுமை, பூச்சிமருந்து, சர்க்கரை கோதுமை, பூச்சிமருந்து," என்று விடாமல் கத்தியபடி வெளியே ஓடினார்,

திரும்பத் திரும்ப அந்த வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டே தெருவெங்கும் ஓடினார்.

எதிரே வருகிற எவரைப் பார்த்தாலும், "சர்க்கரை, கோதுமை, பூச்சிமருந்து" என்றே கத்தினார்,

விஷயம் முற்றி விட்டது என்பதைப் புரிந்து கொண்ட அந்த கிராமத்து மக்கள், "கடைசியில் இப்படி ஆகிவிட்டாரே பாவம் பழையநாட்டாண்மை" என்று பச்சாதாபப்பட்டார்கள்.

## பொங்கல் வாழ்த்து

கழகத் தோழர்களுக்கும், வாசகர்களுக்கும், ஏஜெண்டுகளுக்கும், விளம்பரதாரர்களுக்கும் "அண்ணா" நாளிதழின் சார்பில் பொங்கல் நல்வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—ஆசிரியர்





எத்தனையோ பக்கங்கள்! அத்தனையும் முத்துக்கள்!

பொங்கல் மலர்

ஹேமா ஆனந்த தீர்த்தனின்

ரேகா—சதீஷ்—ராஜி ஆரம்பம்

ஞாயிறுதோறும் இரவு 10 மணிக்கு விவித பாரதி வர்த்தக ஒலிபரப்பில் 'தாய்' தரும் விருந்து சிறப்பு நிகழ்ச்சி கேட்க தவறாதீர்கள்.

17—1—82 விலை. ரூ 1

ஏஜெண்டுகள் இல்லாத ஊர்களுக்கு விண்ணப்பிக்க:

'தாய்' நெல்சன் மாணிக்கம் சாலை, சென்னை-600029

ஆண்டு சந்தா ரூ 52 6 மாத சந்தா ரூ 26


★ ஏழ்மை-அறியாமை அகல ஒன்றுபட்டு உழைப்போம்

# அண்ணாவின் கனவை நனவாக்க சூளுரை ஏற்போம்



## புரட்சித்தலைவர் பொங்கல் செய்தி

சென்னை, ஜன. 13-ஏழ்மை, வறுமை, அறியாமை, தீண்டாமை போன்ற கொடுமைகளை அகற்ற ஒன்றுபட்டு உழைப்போம். பேரறிஞர் அண்ணாவின் கனவுகளை நனவாக்க சூளுரை ஏற்போம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் தமது பொங்கல் செய்தியில் கூறியிருக்கிறார்.

தமிழக முதல்வர் புரட்சித்தலைவர், தனது பொங்கல் வாழ்த்துச் செய்தியில் கூறியிருப்பதாவது:—

என்னை வாழவைக்கும் தெய்வங்களாகிய தாய்மார்களே, பெரியோர்களே என் இரத்தத்தின் இரத்தமான உடன்பிறப்புக்களே.

புத்தாண்டின் தலை நாளாம் பொங்கல் திருநாளில் என் இதயம் கனிந்த வாழ்த்துக்களையும் வணக்கங்களையும் காணிக்கையாக்குகிறேன்.

### தமிழகத்தின் தேசிய திருநாள்

பொங்கற் புதுநாள் தமிழகத்தின் தேசியத் திருநாள். உழைப்பை அடிப்படையாகக் கொண்ட தூய வாழ்க்கையே தமிழகத்தின் சமுதாய வாழக்கை என்பதனை உலகிற்கு உணர்த்திடும் திராவிடத் திருநாள். தமிழக மக்கள் அனைவரும் எவ்வித வேறுபாடும் இன்றி கொண்டாடி மகிழும் மங்கலத்திருநாள்.

உழைப்போரே உயர்ந்தவர் என்பதையும் உழைத்துப் பெற்ற பயனை பகிர்ந்து உண்போரே உயர்ந்தவர் என்பதையும் வலியுறுத்தும் நாள் பொங்கல் திருநாள்.

### இடர்களை தகர்த்து...

இயற்கையின் நலன்கள் அனைத்தும் சமுதாயம் முழுவதற்கும் சொந்தம் என்பதையே திராவிடத் திருநாளான பொங்கல் விழா எடுத்துரைக்கிறது.

நாட்டின் ஒட்டு மொத்த நன்மைக்காக நமது அறிவு-உழைப்பு ஆற்றல் அனைத்தையும் பயன்படுத்திட, உறுதி ஏற்றிட இந்நாள் பொருத்தமான நாள்.

சிந்தனையிலும் செயலிலும் நேர்மையைக் கடைப் பிடித்து அமைதியான சமூக வாழ்க்கைக்கு அவ்வப்போது எழும் இடர்களைத் தகர்த்து எறிந்து, எல்லார்க்கும் எல்லாம் என்கிற இனிய குறிக்கோள் நிறைவேற நம்மை

(2-ம் பக்கம் பார்க்க)



## திருவள்ளுவர் திருநாள்

வள்ளுவர் கோட்டம் - சென்னை

15-1-82 வெள்ளி

| | |
|---|---|
| காலை 9.00 மணி | இன்குழலிசை (இசைக் கல்லூரி மாணவர்கள்) |
| 10.00 மணி | நூற்காட்சி திறப்பு - தொடக்கவிழா |
| வரவேற்புரை | அரசுக் கல்வித்துறை ஆணையர்-செயலாளர் திரு. சி. இராமதாஸ் இ.ஆ.ப. |
| தொடக்க உரை | மாண்புமிகு செய்தி அறநிலையத்துறை அமைச்சர் திரு. இராம. வீரப்பன் அவர்கள் |
| கருத்தரங்கத் தலைமை கருத்து | தவத்திரு குன்றக்குடி அடிகளார் கருத்துரைஞர் |
| திருக்குறள் நோக்கில் ஒழுக்கம் | டாக்டர் தமிழண்ணல் |
| திருக்குறள் நோக்கில் மகளிர் | டாக்டர் ஆறு. அழகப்பன் |
| திருக்குறள் நோக்கில் சமுதாயம் | டாக்டர் தெ. ஞானசுந்தரம் |
| மாலை 3—00 மணி | இன்குழலிசை |
| ,, 4—00 மணி | உரைகல் பொருள் — மொழிநடை |
| தலைமை | பேராசிரியர் அ. கி. பரந்தாமனார் |
| பங்கு கொள்வோர் | கலைமாமணி திரு. நாரண துரைக்கண்ணன் (எழுத்தாளர்) |
| | திரு. அகிலன் (வானொலி) |
| | திரு. வெ. நல்லதம்பி (தொலைக்காட்சி) |
| | திரு. எ. பரசுராமன் (அண்ணா நாளிதழ்) |
| | திரு. நக்கீரன் (பாடநூல் நிறுவனம்) |
| மாலை 4.30 மணி | நிறைவு விழா |
| தலைமை | மாண்புமிகு கல்வி அமைச்சர் திரு. செ. அரங்கநாயகம் அவர்கள் |
| சிறப்புரை | மாண்புமிகு நிதி அமைச்சர் டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் |
| சிறந்த நூல்களுக்குப்பரிசு வழங்கல்—நிறைவுரை | மாண்புமிகு தமிழ்நாடு முதல்வர் திரு. எம். ஜி. ஆர். அவர்கள் |
| இரவு 7—00 மணி | பரத நாட்டியம் அரசு நர்த்தகி கலைமாமணி செல்வி சுவர்ணமுகி அவர்கள் |
| நன்றி | மா. நன்னன் தமிழ் வளர்ச்சி இயக்குநர் |

நூற்காட்சி அமைப்பு; மறைமலையடிகள் நூல் நிலையம், சென்னை-600 001

அனைவரும் வருக!

—தமிழ் வளர்ச்சித்துறை.

EP DIPR 1050.82.3

## விடுமுறை அறிவிப்பு

தமிழர் திருநாளாம் பொங்கல் திருநாளை முன்னிட்டு "அண்ணா" நாளிதழ் அலுவலகத்துக்கு நாளை (14-ந்தேதி) விடுமுறை. எனவே அடுத்த இதழ் நாளை மறுநாள் (15-ந் தேதி) மாலை சென்னையிலும் அதற்கு அடுத்த நாள் காலையில் வெளியூர்களிலும் கிடைக்கும்.

—நிர்வாகி

# இது எங்கள் பிறப்புரிமை!

ஒரு இளம் அழகியைத் தனக்கு உரிமையாக்கிக் கொள்ளத் திட்டம் தீட்டினார் அந்த 'மாஜி' கலைஞர்.

அழகி சம்மதிக்கவில்லை. ஏனென்றால் அவளுக்கு இந்த 'மாஜி' யைப்பற்றி ஏற்கனவே தெரியும்.

அவளை எப்படி சரிக்கட்டுவது என்று தெரியாமல் தனது குரலை "எதிரொலிக்க' ஒரு ஆசாமியைப் பிடித்தார்.

"மாஜி' கலைஞர் ஒலிக்க அதை ஆசாமி எதிரொலிக்க, இடையில் என்னென்னவோ மிரட்டல்கள் அந்த அழகிக்கு.

இறுதியில் அந்த அபலை இந்தக் குள்ளநரிகளிடம் ஏமாந்து விட்டாள்.

அவளை எங்கே குடிவைப்பது; கள்ளக்குடித்தனத்தை எப்படி நடத்துவது என்பது பற்றி மாஜியும், ஆசாமியும் கடற்கரையில் உட்கார்ந்து விவாதித்தார்கள்.

இந்த விஷயத்தில் இருவரும் இணைந்தே செயல்படுவது என்று ஏகமனதாகத்தீர்மானித்தார்கள்.

அகப்பட்டுக் கொண்ட அழகியைத் தன் வீட்டுக்கு அருகே தனிக்குடித்தனம் வைக்க "மாஜி" க்கு ஆசை. அவரது திருட்டுத்தனத்துக்கு வசதியாக இருக்கும் அல்லவா?—

ஆனால்! தன் வீட்டுக்கு அருகே குடித்தனம் வைக்க ஆசாமிக்கு ஆசை— காரணம் அதேதான்;

இந்தச் சிக்கல் எழுந்ததும் 'மாஜி'யும் ஆசாமியும் குடுமியைப் பிடித்துக்கொள்ளும் சூழ்நிலை ஏற்பட்டது.

எப்படியோ அவர்கள், சமாதானம் அடைந்து இருவர் வீடுகளுக்குப் பக்கத்திலும் இல்லாமல் பொதுவாக ஒரு பகுதியில் அவளைக் குடிவைக்கலாம் என்று தீர்மானித்தார்கள்.

அதன்படி—

"மாஜி'யின் பெயர் கொண்ட பகுதியில் மர்ம பங்களா ஒன்றைப் பிடித்து அழகியை அங்கே குடியமர்த்தி, ஆராதனைகளைத் தொடங்கினார்கள்.

இப்போது அவர்களுக்குள் சலிப்பு!

இருவருமே தப்பியோடச் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த எத்தர்களை நம்பி ஏமாந்து உற்றார் உறவினரைப் பகைத்துக் கொண்ட அந்த அழகி இப்போது இருதலைக்கொள்ளி எறும்பாகத் தவிக்கிறாள். பாவம்!

அந்த 'மாஜி' யின் பெயரும்—

அந்த அழகி குடித்தனம் வைக்கப்பட்ட மர்ம மாளிகை முகவரியும்—

விரைவில் அம்பலமாகும்!

இல்லாதவற்றை இட்டுக்கட்டி எழுதி அவதூறுகளைப் பரப்புவது எதிரிகளின் உரிமை என்றால்—

உண்மையில் நடந்தவற்றை உலகுக்கு உரைப்பது நமது பிறப்புரிமை!

சென்னை கிரிக்கெட் டெஸ்ட்

# இந்திய அணியின் ஆமைவேக ஆட்டம்: ரன்கள் குவியவில்லை

## காச்சுக்களை கோட்டைவிட்ட இங்கிலாந்து

சென்னை, ஜன. 13—சென்னையில் இன்று துவங்கிய 5வது கிரிக்கெட் டெஸ்ட்டில் இன்று இந்திய அணி ஆட்டத்தைத் துவக்கி ஆமை வேகத்தில் ரன்களை எடுத்தது. ஆனாலும் இங்கிலாந்து அணி காச்சுக்களை கோட்டைவிட்ட நிலையில் இருந்தது.

இடைவேளையின் போது ஒரு விக்கெட் இழப்புக்கு இந்திய அணி 49 ரன்களையேஎடுத்து இருந்தது.

இந்தியாவுக்கும், இங்கிலாந்துக்கும் இடையேயான 5வது கிரிக்கெட் டெஸ்ட் இன்று சென்னையில் துவங்கியது.

சேப்பாக்கம் சிதம்பரம் மைதானத்தில் கிரிக்கெட் ஆட்டத்தைப் பார்க்க 50 ஆயிரம் ரசிகர்கள் பெருத்த ஆர்வத்துடன் கூடி இருந்தனர்.

ஆட்டம் துவங்கும் முன்பு டாஸ் போடப்பட்டது. டாசில் இங்கிலாந்து வெற்றி பெற்றாலும் இந்தியாவிளையாட விட்டுக் கொடுத்தனர்.

இந்திய அணி துவக்க ஆட்டக்காரர்களாக கவாஸ்கரும், பிரணுப்ராயும் ஆட்டத்தைத் துவக்கினார்கள்.

கவாஸ்கரும், பிரணுப்ராயும் ஆட்டத்தைத் துவக்கியபோது ரசிகர்களது ஆரவாரம் எழுந்தது.

## இந்தியாவின் ஆமை வேக ஆட்டம்

சென்னை சிதம்பரம் மைதானத்தில் இன்று துவங்கிய கிரிக்கெட் டெஸ்டில் முதல் நாள் ஆட்டத் துவக்கத்தில் இந்தியாவின் ஆட்டம் ஆமை வேகத்தில் இருந்தது.

நிமிடங்கள் நகர்ந்த வண்ணம்இருந்தது. ஆனால் இந்தியாவின் கணக்கில்ரன்கள் எண்ணிக்கை ஏறாமல் மிகவும் ஆமை வேகத்திலேயே இருந்தது.

முதல் 56 நிமிடங்களில் இந்தியாவின் ரன் ஏழிலேயே இருந்தது.

சாதாரணமாக ஒரு நிமிடத்திற்கு ஒரு ரன் சாத்யம் என்றாலும் சுமாராக மணிக்கு 30 முதல் 40 ரன் வரை எடுக்க முடியும்.

ஆனால் இந்திய தரப்பு ஆட்டம் ரசிகர்களது ஆர்வத்தை சிதைக்கும் வகையிலேயே இருந்தது.

## அற்புதமாக அடித்தாரே பவுண்டரி

57-வது நிமிடத்தில் தான் ரசிகர்களது பொறுமையை மேலும் சோதிக்காமல் இந்திய அணித்தலைவர் கவாஸ்கர் அற்புதமாக ஒரு பவுண்டரியை அடித்து 4 ரன்களைச் சேர்த்தார்.

58-வது நிமிடத்தில் தான் இந்தியாவின் எண்ணிக்கை 11 ரன்என்ற அளவில் உயர்ந்தது.

இந்தியாவின் ஆட்டம் ஆமை வேகத்தில் நகர்ந்தாலும் இங்கிலாந்துக்காரர்களால் இந்திய விக்கெட் ஒன்றைக் கூட வீழ்த்த முடியாதது இந்திய ரசிகர்களுக்கு மகிழ்வாக இருந்தது.

## பிரணுப்ராய் அடித்த அடி

11,20க்கு பிரணுப்ராய் முதல் பவுண்டரியை அடித்து 4 ரன்களை எடுத்தார் டெஸ்ட் பந்தயத்தில் முதல் பவுண்டரியை பிரணுப்ராய் அடித்து ரசிகர்களது கைதட்டலைப் பெற்றார்.

பிரணுப்ராய் அடித்த பவுண்டரிகளுக்குப் பிறகு இந்திய அணிஎண்ணிக்கை 18 ஆக உயர்ந்தது.

விக்கெட் இழப்பு இன்றி 18 ஆக இருந்தபோது கவாஸ்கரின் கணக்கில் 9ம், பிரணுப்ராயின் கணக்கில் 6 ரன்களும் இருந்தன.

## முதல் விக்கெட் வீழ்ந்தது

பவுண்டரி அடித்து 6 ரன்களைப் பெற்றிருந்த பிரணுப்ராய் விக்கெட் 85-வது நிமிடத்தில் வீழ்ந்தது. டெல்லி வீசிய பந்தால் பிரணுப்ராய் ஆட்டம் இழந்தார்.

இந்த நிலையில் இந்தியா ஒரு விக்கெட் இழப்பிற்கு 19 ரன்னையே எடுத்து இருந்தது.

அதன் பிறகு கவாஸ்கருடன் வெங்சர்க்கார் இணைந்து ஆடத் தலைப்பட்டார்.

## கூச்விட்டகாச்: வெங்சர்க்கார் தலைதப்பியது

வெங்சர்க்கார் அடித்த ஒரு பந்தை இங்கிலாந்து ஆட்டக்காரர் கூச் காச் பிடித்து இருக்கவேண்டும். ஆனால் சுலபமான காச்சை கோட்டை விட்டார். இதனால் வெங்சர்க்கார் விக்கெட் விழாமல் தலை தப்பியது. இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் இப்படி மும்முறை காச்சை கோட்டைவிட்டனர். இது இந்தியாவின் அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்.

கவாஸ்கர், வெங்சர்க்கார் ஜோடி நிதானத்துடன் அதே நேரத்தில் துணிச்சலாக ஆடத் தொடங்கினார்கள்.

ஆனாலும் இதில் வெங்சர்க்கார் சற்று அதிக துணிச்சலுடன் பந்தை அடிக்க முற்பட்டு ரன்களை சேர்க்கத் தலைப்பட்டார்.

இரண்டு மணி நேர ஆட்டம் முடிந்து உணவு வேளையின்போது இந்தியா மொத்தம் ஒரு விக்கெட் இழப்புக்கு 49 ரன்களை எடுத்து இருந்தது.

கவாஸ்கர் 24 ரன்களும் வெங்சர்க்கார் 16 ரன்களும் எடுத்து ஆட்டம் இழக்காமலிருந்தனர்.

இந்த ஆட்டத் தொடரிலேயே சென்னை டெஸ்டில் தான் உணவு நேர இடைவேளை வரை 49 ரன்கள் என்ற விகிதம் இருந்தது.

வேறு எந்த டெஸ்டிலும் இவ்வளவு குறைவான ரன்களை எந்த அணியும்

(3-ம் பத்தி பார்க்க)

# புரட்சித் தலைவர் ரசித்த கிரிக்கெட்

சேப்பாக்கம் சிதம்பரம் மைதானத்தில் நடந்த இந்தியா—இங்கிலாந்து கிரிக்கெட் விளையாட்டைப் பார்க்க முதல்வர் புரட்சித் தலைவர் வந்திருந்தார்.

இந்திய அணியின் ஆட்டத்தையும், இங்கிலாந்தின் பந்து வீச்சையும் முதல்வர் புரட்சித்தலைவர் ரசித்துப்பார்த்தார்.

# டாக்சி டிரைவர் கொலை தொடர்பாக ஒருவர் கைது

சென்னை, ஜன. 13—டாக்சி டிரைவரை அடித்துக் கொன்றதாக அவரது காதலியின் மகன் கைது செய்யப்பட்டான்.

ராயப்பேட்டையைச் சேர்ந்தவர் செல்வராஜ். வயது 40. டாக்சி டிரைவராக இருந்தார். இவர்சுத்தியால் அடித்துக் கொல்லப்பட்டார்.

இதுசம்பந்தமாக அண்ணாசாலை போலீசார் புலன் விசாரணை நடத்தி ராஜு என்ற 22 வயது வாலிபரை கைது செய்தனர்.

செல்வராஜின் முதல் மனைவி ஆரணியில் இருக்கிறார்.

2-வது சேர்த்துக் கொண்ட மனைவி கங்கம்மாளின் மகன் இந்த ராஜு என்று விசாரணையில் தெரிய வந்தது.

வேலூரில் ஒருபெண்ணுடன் செல்வராஜ்தொடர்பு கொண்டதாகவும் இதை ராஜு கண்டித்ததால் தகராறு ஏற்பட்டதாகவும் கூறப்படுகிறது.

ராஜுவை கைது செய்து போலீசார் மேலும் புலன் விசாரணை நடத்துகிறார்கள்.

கவாஸ்கர் அவுட்:

# வெங்சர்க்கார் விசுவநாத் அபார ஆட்டம்

சென்னை, ஜன. 13—இந்திய கிரிக்கெட்வீரர்கள் வெங்சர்க்கார், விசுவநாத் ஆகியோர் இன்றைய சென்னை ஆட்டத்தில் அபாரமாக ஆடினார்கள்.

உணவு இடைவேளைக்குப் பிறகு ஆட்டம் சிறிது விறுவிறுப்பு ஏற்பட்டது.

ஆனால் இந்தியாவின் துரதிருஷ்டம், விலை மதிக்க முடியாத கவாஸ்கர் விக்கெட்இடைவேளைக்குப் பிறகு 2-வது விக்கெட்டாக வீழ்ந்து விட்டது.

25 ரன்களை கவாஸ்கர் எடுத்து இருந்தார். ஆனால் 2 மணி நேர பந்து வீச்சை சமாளித்து நின்றதுபெரும் சாதனையாகும்.

பிறகு வெங்சர்க்காரும் ஜி. ஆர். விசுவநாத்தும் இணைந்து விளையாடத் தொடங்கினர்.

பிற்பகல் 1-45 மணிக்கு இந்தியா சதத்தைத் தொட்டது

விசுவநாத்அடித்தபவுண்டரியால் நூறைத் தாண்டியது. ரன்களும் குவியத்துவங்கியது.

அப்போது வெங்சர்க்கார் 53 ரன்களை எடுத்து இருந்தார்.

ஸ்கோர் விவரம்:-

வெங்சர்க்கார் —53

விசுவநாத் —19

இந்தியா 2 விக்கெட் இழப்பிற்கு 108 ரன்கள்.

# வடநாட்டு திருடர்களுக்கு ஜாமீன் மறுப்பு

சென்னை, ஜன. 13—பல மாநிலங்களில் கொள்ளை அடித்த வடநாட்டுகொள்ளைக்காரர்கள் நான்கு பேரை ஜாமீனில் விட சென்னை உயர்நீதி மன்றம் மறுத்தது.

சென்னையிலும், கோவையிலும் பூட்டிய வீடுகளில் பூட்டை உடைத்து புகுந்து பல லட்சரூபாய் மதிப்புள்ள பொருட்களைக் கொள்ளையடித்த இந்த 4பேர்களைப் போலீசார் கைது செய்தனர். இவர்களிடமிருந்து 4 லட்ச ரூபாய் மதிப்புள்ள திருட்டுப்பொருட்கள்கைப்பற்றப்பட்டன. தங்களை ஜாமீனில் விடவேண்டும் என்று இந்த 4 பேர்களும் சென்னை உயர் நீதி மன்றத்தில் மனு செய்திருந்தனர். ஆனால் போலீசார் இவர்கள் கடுமையான குற்றவாளிகள், இவர்களின்உறவினர்கள் பங்களாதேஷில்உள்ளனர். இவர்களை ஜாமீனில் விட்டால் அங்கு ஓடிவிடுவார்கள். பிறகு அவர்களை பிடிப்பது கடினம். எனவே அவர்களை ஜாமீனில் விடக் கூடாது என்று தெரிவித்தனர்.

நீதிபதி சத்தார் சையது போலீசாரின் வாதத்தை ஏற்று அந்த 4 பேரையும் ஜாமீனில் விட மறுத்து அவர்களின் மனுவை நிராகரித்தார்.

# டீகடைக்குள் பாய்ந்த லாரி

சென்னை, ஜன. 13—சென்னை ராதாகிருஷ்ணன் சாலையில் வேகமாக வந்த ஒருலாரி ஒரு டீகடைக்குள் நுழைந்தது.

டீகுடித்துக்கொண்டிருந்த 3 பேர் படுகாயமுற்றனர். அவர்களில் மந்தவெளியைச்சேர்ந்த மணி என்பவர் சிகிச்சை பலனளிக்காமல் இறந்தார்.

படுகாயமுற்ற காமராஜ் பாலகிருஷ்ணன்ஆகியோர் சிகிச்சை பெற்று வருகிறார்கள்.

# புரட்சித் தலைவர் செய்தி..

(1-ம் பக்க தொடர்ச்சி)

ஒப்படைத்துக் கொள்வோம்.

வயல்களிலும் ஆலைகளிலும் உற்பத்தி பெருகிடவும், பெருகும் உற்பத்தியின் பயன்கள் மக்கள் அனைவருக்கும் சென்றடையவும் கட்டுப்பாட்டுக்கு உட்பட்ட நடைமுறைகள் பின்பற்றப்பட வேண்டும்.

தனி வாழ்க்கையிலும், பொது வாழ்க்கையிலும் மறம்நீங்கி அறம் செழிக்கப் பாடுபடுவோம்.

ஏழ்மை - வறுமை - அறியாமை - தீண்டாமை போன்ற கொடுமைகளை அகற்றிட அனைவரும் ஒன்றுபட்டுஉழைப்போம்.

தனி நபரை விட-தனி நபர் நலன்களைவிட —சமுதாயமும், நாடும் பெரிது என்ற உணர்வுடன பேரறிஞர் அண்ணா அவர்கள் கனவுகண்ட சமத்துவ — சமுதாய அமைப்பை அமைது வழியில் மக்களாட்சிதத்துவத்தின் அடிப்படையில் அமைததிட அயராது பாடுபட சூளுரைத்து முன்னேறுவோம்.

## உழைப்போரே உயர்ந்தோர்

மனிதர் நோக மனிதர் பார்க்கும் வாழ்க்கை இனி இல்லைஎன்கிற பாரதியாரின வாக்கை மெய்யாக்குகின்ற வகையில் உழைப்போரே உயர்ந்தவர், உழைப்பே உயர்வு தரும் எனும் சீரிய கொள்கைகளைக் கட்டிக்காத்து புத்துலகைச் சமைத்திட பேதங்களை நீக்கி ஒன்றுபட்டுப் பணியாற்றுவோம் என நல்ல உள்ளம் படைத்த அனைவரையும் இருகரம்கூப்பி அழைக்கிறேன்.

இந்த ஆண்டு உழைக்கும் வர்க்கத்தினர் அனைவருக்கும் மகிழ்ச்சி தரும் ஆண்டாக அமைந்து அனைவர் உள்ளத்திலும மகிழ்ச்சி பொங்கட்டும்என வாழ்த்துகிறேன்.

தமிழக மக்கள் அனைவருக்கும் எனது பொங்கல் வாழ்த்துக்களை உரிமையாக்குகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சிததலைவர் பொங்கல் திருநாளை ஒட்டி வெளியிட்டுள்ள செய்தியில் கூறியுள்ளார்,

# பம்பாயில் இருந்து கடத்தப்பட்டபெண்: தஞ்சையில் மீட்பு

தஞ்சை, ஜன. 13—பம்பாயில் இருந்து கடத்தப்பட்ட பெண்ணை, தஞ்சையில், பம்பாய் போலீசார் மீட்டனர். இது தொடர்பாக வாலிபர் ஒருவர் கைது செய்யப்பட்டார்.

பம்பாய் தாராவியைச் சேர்ந்த பிரபல வியாபாரி ஒருவர் தனது 17 வயது மகளைக் காணவில்லை என போலீசில் புகார் கொடுத்திருந்தார்.

கடத்தப் பட்டதாகக் கூறப்பட்ட அப்பெண் 60 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகள் அணிந்திருந்ததாகவும் அப்பெண்ணின் தந்தை தனது புகாரில் தெரிவித்திருந்தார்.

அப்புகாரின் பேரில் விசாரணை நடத்திய போலீசார் அந்த இளம பெண் தமிழ் நாட்டிற்கு கடத்திச் செலலப் பட்டிருக்கக் கூடும் எனக்கருதி தமிழகத திறகு வந்து விசாரணை நடததினாகள்.

தஞ்சைக்கு அருகே கருந்தட்டாங்குடியில பம்பாய் போலீசார இளம்பெண்ணை மீட்டனர்.

இளம் பெண்ணைக் கடத்தி வந்ததாகக் கூறப்படும் வாலிபர்ஒருவர்கைது செய்யப்பட்டார்.

அந்தவாலிபரிடம்இருந்து 25 ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள நகைகள் மீட்கப் பட்டன. தொடர்ந்து போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.

(6-ம் பத்தி தொடர்ச்சி)

எடுக்கவில்லை.

உணவு இடைவேளையின் போது ரன்கள் குவிக்கவில்லையே என்ற நிலையில் இந்தியாவும், காச்சுக்களை கோட்டை விட்டோமே" என்ற நிலையில் இங்கிலாந்தும் இருந்தன.

## இடைவேளை ஸ்கோர் விவரம்

இடைவேளை வரை இந்திய அணி எடுத்த ரன் விவரம் வருமாறு:

ஆட்டம் இழந்த

பிரணுப்ராய் – 6

கவாஸ்கர் — 24

வெங்சர்க்கார் — 16

உதிரிகள் — 3

கவாஸ்கரும் வெங்சர்க்காரும் ஆட்டம் இழக்காமல் ஆடிக்கொண்டு இருக்கிறார்கள்.

Published by K. Ravindran on behalf of Thangamani Publications and Printed by him at All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-600 029. Editor: B. PARASURAMAN

விறுவிறுப்பாக விற்பனையாகிறது!

★ அண்ணா பொங்கல் மலர்! ★

புரட்சித்தலைவரின் கருத்துப் படையலோடு...

★ அமைச்சர் பெருமக்கள்!
★ அறிவுலகச்சான்றோர்!
★ இலக்கிய வேந்தர்கள்!
★ கலையுலகத் தாரகைகள்!

—ஆகிய பல துறை நிபுணர்களின் படைப்புக்களைத் தாங்கி ...

★ கன்னல் கவிதைகள் - கற்கண்டுச் சிறுகதைகள் - துணுக்குகள் - ஆகியவற்றோடு-

★ முக்கனியின் கூட்டாக முத்தமிழின் சுவையாக..!

விறுவிறுப்பாக விற்பனையாகிறது!

கண்ணடி போட்டு மாட்டுவதற்கென்றே அச்சிடப்பட்ட — புரட்சித்தலைவரின் பல வண்ண "ஆப்செட்' அட்டை!

ஏமாற்றத்தைத் தவிர்க்க இன்றே வாங்குவீர்!

84 பக்கம்

விலை ரூ. 1.50

## குமரி மாவட்ட தி. மு. க.-ஜனதாவினர் கழகத்தில் இணைந்தனர்

கன்னியாகுமரி, ஜன. 13- குமரிமாவட்டம்கல்லுவிளை வட்டார தி.மு.க. செயலாளர்வடிவேல், துணைச்செயலாளர் மத்தியாஸ் செயற்குழு உறுப்பினர்கள் தேவசகாயம், ரசல் மிக்கேல்

(6-ம் பத்தி பார்க்க)


தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம்

மதுரை வட்டம்

டெண்டர் அறிவிப்பு

எண்: 17-81-82

கீழ்க்கண்ட பணிகளுக்கான மூடி முத்திரையிட்ட டெண்டர்கள், கவரின் மேல் வேலையின் பெயர், டெண்டர்தாரர்களின் பெயர் முதலியவற்றை குறிப்பிட்டு, இனம் எண் 4ல் குறிப்பிட்ட தேதியன்று பிற்பகல் 3.00 மணி வரை கீழ் கையொப்பமிட்டவரால் வரவேற்கப்படும். டெண்டர்கள் அன்றே பிற்பகல் 3.05 மணிக்கு கீழ் கையொப்பமிட்டவரால் ஆஜராகியுள்ள டெண்டர்தாரர்களின் முன்னிலையில் திறக்கப்படும்.

டெண்டர் டாக்குமெண்டுகளை செயற்பொறியாளர் மற்றும் நிர்வாக அதிகாரி, மதுரை ஹவுசிங் யூனிட், மதுரை அவர்களின் அலுவலகத்திலிருந்து இனம் எண்-6 குறிப்பிட்ட தொகையை செலுத்தி நேரில் பெற்றுக் கொள்ளலாம். தபால்மூலம் தேவைப்பட்டால்; ஷெட்யூலின் விலையுடன் ரூ. 5-ஐ தபால் செலவுக்கென அதிகமாக, செயற்பொறியாளர் அவர்களின் பேரில் மணியார்டர் அனுப்பி பெற்றுக் கொள்ளலாம்.

டெண்டர்களுடன் டேவணித் தொகையை செயற்பொறியாளர் மற்றும் நிர்வாக அதிகாரி அவர்களின் பேரில் டிமாண்ட் டிராப்டாகவோ அல்லது மதுரை ஹவுசிங் யூனிட், மதுரையில் ரொக்கம்செலுத்தியரொக்க ரசீதோ இணைக்க வேண்டும். டெண்டர் டாக்குமெண்டுகள், தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம், பொ.ப.து. மற்றும் அரசத் துறைகளில் தகுதி வாய்ந்த வகுப்பில் பதிவு பெற்ற ஒப்பந்ததாரர்களுக்கு வழங்கப்படும்.

வேலையின் விவரம்:-

i) ஹட்கோ திட்டம் மதுரை மாவட்டம், தேனியில் Neighbourhood திட்டத்தில் W. B. M. சாலை அமைத்தல்.

ii) ஹட்கோ திட்டம் மதுரை மாவட்டம், தேனியில் Neighbourhood திட்டத்தில் Masonry drain மற்றும் R.C.C. hump pipe Culvert கட்டுதல்.

iii) ஹட்கோ திட்டம் மதுரை மாவட்டம்தேனியில் Neighbourhood திட்டத்தில் குறுக்கு சாலைகளில் Retaining சுவர்கள் கட்டுதல்.

2) வேலையின் தோராய மதிப்பு:-

i) ரூ. 1.34 லட்சம்

ii) ரூ. 3.50 லட்சம்

iii) ரூ. 2.15 லட்சம்

3) டேவணித் தொகை டெபாசிட்:-

i) ரூ. 2,000.

ii) ரூ. 5,250.

iii) ரூ. 3.225

4) டெண்டர்கள் பெற்றுக் கொள்வதற்கான இறுதி தேதி:-

i, ii & iii 2-2-82

5) டெண்டர் டாக்குமெண்டுகளின் விலை:-

i) ரூ. 20.85

ii) ரூ. 31-30

iii) ரூ. 20.85

6) டெண்டர் ஷெட்யூல்கள் கிடைக்கும் நாட்கள்:-

எல்லா பணிகளுக்கும் 1.2.82 அன்று பிற்பகல் 1 மணிவரை.

யாதொரு காரணமும் காட்டாமல் எல்லாம் அல்லது ஏதேனும் ஒரு டெண்டரையோ நிராகரிக்க கீழ் கையொப்பமிட்டவருக்கு பூரண உரிமையுண்டு—

கண்காணிப்பு பொறியாளர், மதுரை வட்டம்

ஜவஹர்தெரு, விரிவாக்கம் காந்திநகர், மதுரை 625020.

டிஐபிஆர்-3-82-12


★ சிமெண்ட் கொடுக்கச் சொல்லி சிபாரிசு செய்து அந்துலே கையெழுத்துள்ள விண்ணப்பங்கள்

★ குற்றச்சாட்டுகள் நிரூபணமாவதாக உயர்நீதிமன்றம் தீர்ப்பு

## மராட்டிய இ. காங்கிரஸ் முதல்வர்

# அந்துலே ராஜினாமா

## புதிய முதல்வர் தேர்வுக்கு அவசரக் கூட்டம்

பம்பாய், ஜன. 13— மராட்டிய முதல்வர் அந்துலே மீது கூறப்பட்ட புகார்கள் நிரூபணம் ஆகின்றன என்று பம்பாய் உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியது. இதைத் தொடர்ந்து அந்துலே தமது முதல்வர் பதவியை ராஜினாமாச் செய்தார். புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க இ. காங்கிரஸ் கட்சிக் கூட்டம் நாளை (வியாழக்கிழமை) நடக்கிறது.

பிரதமர் பெயரில் அந்துலே ஒரு அறக்கட்டளை அமைத்து இருந்தார். இதற்குநன்கொடை அளித்தவர்களுக்கே சிமெண்டு கொடுக்கப்பட்டு ஊழல் செய்ததாக மராட்டிய முதல்வர் அந்துலே மீது எதிர்க்கட்சிகள் புகார் கூறின.

இது பெரும் அரசியல் பிரச்னையை கிளப்பியது.

அந்துலே மீது முன்னாள் எம். பி. மிருணாள் கோரே, முன்னாள் எம். எல். ஏ.க்கள் சமந்த், கமல் தேசாய் ஆகியோர் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் வழக்கு தொடர்ந்தனர்.

நீதிபதி லெண்டின் முன்னிலையில் வழக்குநடந்தது. வழக்கில் நேற்று தீர்ப்பு கூறப்பட்டது. அந்துலே குற்றவாளி என்று நீதிபதி தீர்ப்புக் கூறினார்.

தீர்ப்பில் கூறப்பட்டு இருப்பதாவது:-

கடந்த ஆண்டு மார்ச் 31ந் தேதி மராட்டிய அரசு ஒரு சுற்றறிக்கை அனுப்பியுள்ளது. அதன் அடிப்படையில்தான் தற்காலிக கோட்டாவில் இருந்து சிமெண்டு மூட்டைகள் வினியோகம் செய்யப்பட்டு இருக்கின்றன.

நன்கொடை அளித்தவர்களுக்கு சிமெண்டு கொடுத்ததாக அந்துலே மீது கூறப்படும் குற்றச்சாட்டு ருசுவாகிறது. சிமெண்டு கொடுத்ததற்கு மராட்டிய அரசு சொல்லும் காரணங்களை ஏற்க முடியாது.

முதல்வர் தனது பிரமாண பத்திரத்தில் கூறியிருப்பதை நிராகரிக்கிறேன்.

கட்டிடம் கட்டுகிறவர்களுக்கு சிமெண்டு ஒதுக்கியதற்கும், அறக்கட்டளைக்கு நன்கொடை வசூலித்ததற்கும் தொடர்பு இருக்கிறது. இதில் முதல்வர் தன்னிச்சையாக செயல்பட்டு இருக்கிறார்.

இவ்வாறு தீர்ப்பில்கூறப்பட்டுள்ளது.

சிமெண்டு கேட்டு வந்த விண்ணப்பங்களில் அந்துலே சிபாரிசு செய்து கையெழுத்துப் போட்டு இருக்கிறார். அந்தவிண்ணப்பங்களை முத்திரையிட்டு பத்திரமாக வைக்கவேண்டும்என்றும்நீதிபதி உத்தர விட்டுள்ளார்.

தீர்ப்பு 79 பக்கங்களில் எழுதப்பட்டிருந்தது.

### ஜனதா ஊர்வலம்

ஐகோர்ட்டு தீர்ப்பை வரவேற்று பம்பாயில் ஜனதாக் கட்சியினர் ஊர்வலம் நடத்தினர்.

தீர்ப்புக் கூறப்பட்ட போது இங்கிலாந்துநீதிபதி டெம்பிள்டனும் கோர்ட்டுக்கு வந்து இருந்தார். அவர் நீதிபதி லெண்டின் அருகில் இருந்தார்.

### அந்துலே ராஜினாமா

உயர்நீதி மன்றத் தீர்ப்பைத் தொடர்ந்து அந்துலே தமது பதவியை ராஜினாமா செய்தார்.

அவர் ஒரு அறிக்கையில் கூறியிருப்பதாவது:—

என்மீது ஊழல் புகார் கூறப்பட்டதும் நான் பதவியை ராஜினாமா செய்ய முன் வந்தேன்.

பிரதமர் இந்திராவுக்கு என் ராஜினாமாவை அனுப்பினேன். ஆனால் அவர் ஏற்கவில்லை.

நான் குற்றவாளி என்று உயர்நீதி மன்றம் தீர்ப்புக் கூறியுள்ளதால் என ராஜினாமாவை ஏற்றுக்கொள்ளும்படி பிரதமரைக் கேட்டுக்கொண்டுள்ளேன்.

இத்துடன் புதிய முதல்வரை தேர்ந்தெடுக்கும்படியும் கேட்டுள்ளேன்.

இவ்வாறு அந்துலே கூறியுள்ளார்.

இதைத் தொடர்ந்து அந்துலே, மராட்டிய கவர்னர் மெக்ராவை நேற்றிரவு சந்தித்து தனது ராஜினாமாவை கொடுத்தார். அந்துலேயின்ராஜினாமாவை கவர்னர் ஏற்றுக் கொண்டார்.

### முதல்வர் யார்? நாளை தெரியும்

புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்கும்வரை பதவியில் நீடிக்குமாறு அந்துலேயை கவர்னர் கேட்டுக்கொண்டார்.

புதிய முதல்வரைத் தேர்ந்தெடுக்க இ.காங்கிரஸ்கட்சிக்கூட்டம் நாளை (வியாழக்கிழமை) நடக்கிறது.

இந்த கூட்டத்தில் மேலிடப் பிரதிநிதியாக மத்தியஅமைச்சர் நரசிம்மராவ் கலந்து கொள்கிறார்.

அடுத்த முதல்வராக ராமராவ் அதிக், தொழிலாளர் நல மந்திரி திட்கே, சிவாஜிராவ், நீலங்கர் ஆகிய மூவரில் ஒருவர் தேர்ந்தெடுக்கப்படுவார் என்று தெரிகிறது.

### ஜனாதிபதி கருத்து

ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டி நேற்று பம்பாயில் இருந்தார். உயர்நீதி மன்றத் தீர்ப்பு வந்ததும் வழக்கு தொடர்ந்த மிருணாள் கோரே, சமந்த், கமல் தேசாய் ஆகியோர் ஜனாதிபதியைச் சந்தித்தனர்.

அந்துலே டிஸ்மிஸ் செய்யப்பட வேண்டும் என்று வற்புறுத்தினர்.

"கோர்ட் தீர்ப்பை ஏற்பேன் என்று பிரதமர் ஏற்கனவேகூறியிருக்கிறார். எனவே அந்துலேவிலகிவிடுவார்" என்று அவர்களிடம் கூறியதாகத் தெரிகிறது.

### கழகத்தினர் நடத்திவைக்கும் இலவச திருமணங்கள்

ஈரோடு, ஜன. 13— குமாரபாளையம் காந்திபுரத்தைச் சேர்ந்த 12வது வட்டக் கழகத் தோழர்கள் 4 இலவச திருமணங்களை நடத்தி வைக்கிறார்கள்.

14-ந் தேதியன்று காலை 7 மணிக்கு எஸ். எஸ். எம். பாலகிருஷ்ணன் தலைமையில் நான்கு திருமணங்களை காடுவெட்டி கண்ணப்பன் எம். எல். சி. நடத்தி வைக்கிறார்.

மணவிழாவில் நடராசன், ராமச்சந்திரன், முத்து, சுப்பிரமணி, முத்துசாமி, சண்முகசுந்தரம், எஸ். ஆர். பழனியப்பன், அம்மையப்பன், மனோகரன், கோவிந்தராசு ஆகியோர் கலந்து கொள்கிறார்கள்.

சென்னை மாநகராட்சி நடத்தும்

### குடும்பநல முகாம்

சென்னை, ஜன. 13— சமூக சேவை நிறுவனங்களின் ஒத்துழைப்போடு சென்னை நகரில் 21-ந்தேதி முதல் மார்ச் மாதம் முடிய குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை முகாம் நடத்த சென்னை மாநகராட்சி முடிவுசெய்துள்ளது

குடும்ப நல அறுவை சிகிச்சை செய்து கொள்ளுவோருக்கு தலா 200ரூபாய் உதவித் தொகையாக வழங்கப்படும்.

குமாரபாளையத்தில்

### கழகத்தினர் நடத்தும் பொங்கல் விழா

சேலம் ஜன 13— பொங்கல் திருநாளையொட்டி 14ந் தேதியன்று இரவு 10 மணிக்கு அமைச்சர் பொன்னையன் தலைமையில் சந்தைபேட்டை அறிஞர் அண்ணா கலையரங்கில் காடுவெட்டி கண்ணப்பன் எம்.எல்.சி, எஸ்.எஸ்.எம். பாலகிருஷ்ணன், வி.முத்து ஆகியோர் பேசுகிறார்கள்.

'முரண்பாடு' என்ற நாடகம் நடைபெறுகிறது. 15-ந்தேதி இரவு 10 மணிக்கு எஸ். எஸ். எம். கவுண்டப்பன் தலைமையில் ஏ. ஜி. நடராசன், ராமச்சந்திரன், சண்முகசுந்தரம் சுப்பிரமணியம், முத்துசாமி ஆகியோர் பேசுகின்றனர்.

'பாராட்டத்தின் அடிமைகள்' என்ற நாடகம் நடைபெறுகிறது.



கோட்டூர்புரம் குடியிருப்பினருக்கு பிளாஸ்டிக் வாளிகளை உள்ளாட்சித் துறை அமைச்சர் குழந்தைவேலு வழங்கினார்.



சென்னையில் பொங்கலை ஒட்டி, முதியோருக்கு அரசின் சார்பில் அமைச்சர் அண்டே ஆடைகள் வழங்கினர்.


டாப்கோ

சுவைமிக்க மிருதுவான பிராய்லர் இறைச்சி உற்பத்தி செய்ய புகழ்மிக்க சாம்ராட் பிராய்லர் குஞ்சுகள்

வாரா வாரம் கிடைக்கும்

டாப்கோ குஞ்சு பொரிப்பகம்

கப்பலூர்.

திருமங்கலம் தாலுகா மதுரை மாவட்டம்

தொலைபேசி: 8197

DIPRI 8-82-6-9


ஓய்வில்செல்லும்வரை அலவன்ஸ்

## போலீஸ்காரர்களுக்கு சிறப்பு விருது: தமிழக அரசு அறிவிப்பு

### பொங்கல் அன்று வெளியிடப்படும்

சென்னை, ஜன. 13— பணியில் உள்ள திறமையான காவலர் மற்றும் தலைமைக் காவலர்களுக்கு அவர்கள் ஓய்வில் செல்லும் வரை சிறப்பு அலவன்ஸ் அளிக்கப்படும் என்று தமிழக அரசு அறிவித்திருக்கிறது. இந்த சிறப்பு விருது பற்றிய விவரங்கள் நாளை பொங்கல் தினமன்று வெளியிடப்படும்.

திறச்செயல் புரிந்து சிறப்பாக பணியாற்றும் காவல்துறை அதிகாரிகள் மற்றும் காவலர், தலைமைக் காவலர்களுக்கு ஆண்டுதோறும் முதல்வரின் போலீஸ் விருதுகள் வழங்கப்பட்டு வருகிறது. இப்போது காவலர் மற்றும் தலைமைக்காவலர்களுக்கு கழக அரசு சிறப்பு விருதும் மாத அலவன்சும் வழங்கப்படவிருக்கிறது. இத்திட்டத்தின் கீழ் திறமையான போலீஸ்காரர் மற்றும் தலைமை போலீஸ்காரர் ஆகியோர்களுக்கு ஒரு பதக்கமும் மாத அலவன்சும் வழங்கப்படும்.

போலீஸ்காரருக்குஅவர்கள் ஓய்வில்செல்லும்வரை 20 ரூபாயும், தலைமை போலீஸ்காரருக்கு 25ரூபாயும் அலவன்சாக வழங்கப்படும், ஆண்டுதோறும் சுமார் ஆயிரத்து 500 போலீஸ்காரர்களுக்கு அவர்களது பதவியைப் பொறுத்து இந்த விருது வழங்கப்படும் முதல் விருது பற்றிய விபரங்கள் பொங்கல் திருநாளான நாளை ஜனவரி 14-ம் தேதி அறிவிக்கப்படும் என்று தமிழக அரசு தெரிவித்திருக்கிறது.

(1-ம் பத்தி தொடர்ச்சி)

வர்கீஸ் உட்பட 100 தி. மு. க. வினரும் கல்லுவிளை வட்டார ஜனதா தலைவர் ஜோசப் தலைமையில் 50 ஜனதாவினரும் குமரி மாவட்ட கழக செயலாளர் எப்.எம். ராசரத்தினம் முன்னிலையில்கழகத்தில்இணைந்தனர்

அப்போது மாவட்ட கழக துணைச் செயலாளர் நாகப்பன், தக்கலை நகர செயலாளர் என்.சி. ராமசாமி, ஒன்றிய செயலாளர் சிவ. குற்றாலம், மாணவர் தலைவர் வே. ராசசேகரன் ஆகியோர் உடனிருந்தனர்.

சென்னை 9-வது வட்ட

### அவைத்தலைவர் சிவாவுக்கு சைக்கிள் வழங்கு விழா

சென்னை, ஜன. 13— சென்னை 9-வது வட்டம் கப்பல் போலு செட்டித் தெருவில் 14-ந்தேதி காலை 11 மணிக்கு வட்டஅவைத் தலைவர் வி. சிவாவுக்கு சென்னை மாவட்ட எம். ஜி. ஆர். மன்றச் செயலாளர் மதுசூதனன் சைக்கிள் வழங்குகிறார்.

விழாவுக்கு எம். ஜி. சந்தானம் தலைமை வகிக்கிறார். விழாவில் புலவர் வேதா, தரங்கை கண்ணன், மோகனசுந்தரம், பாண்டுரங்கன், லோகிதாஸ், கமலக்கண்ணன், சொக்கலிங்கம், தயானன், மணி, வெங்கடேசன் ஆகியோர் பேசுகிறார்கள்.


மத்திய பொதுப்பணித்துறை

சென்னை

50 H.P. 'Garden Reach' Make turbine pump Set-டின் உதிரிபாகங்களுக்கு மூடி முத்திரையிட்ட விலைப்புள்ளிகள் 23-1-82 அன்று பிற்பகல் 3 மணி வரை செயற்பொறியாளர், (எலக்டிரிகல்), சென்னை மத்தியஎலக்டிரிகல் டிவிஷன் எண் I, மத்திய பொதுப் பணித்துறை, ஹாடோஸ் ரோடு, சாஸ்திரி பவன், சென்னை—600 006 அவர்கள் வரவேற்கிறார். Viz பவுல் அசெம்பளி லைன் ஷாப்ட் கப்ளிங் ஸ்லீவ்ஸ் மற்றும் ரீடெயினர்கள்முதலியன. முழுவிவரங்களை இந்த அலுவலகத்திலிருந்து அலுவல் நேரத்தில் இலவசமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

டிஏவிபி-635(1880)-81

மத்திய பொதுப்பணித்துறை

சென்னை

3×50 ச. மி. மீ. அளவுள்ள H. T. 22 K. V. கிரேடு பேப்பர் இன்சுலேட்டட் ஆர்மர்ட் அலுமினியம் Cond - U. G. கேபிள்கள் வழங்குவதற்கான மூடி முத்திரையிட்ட விலைப்புள்ளிகள் செயற்பொறியாளர், (எலக்டிரிகல்) சென்னை மத்திய எலக்டிரிகல் டிவிஷன் எண் 1, மத்திய பொதுப்பணித்துறை, ஹாடோஸ் சாலை, சாஸ்திரி பவன், சென்னை-6 அவர்கள் அங்கீகரிக்கப்பட்ட சப்ளைதாரர்களிடமிருந்து 28.1.82 அன்று பிற்பகல் 3 மணி வரை வரவேற்கிறார். டெண்டர்கள் அன்றே பிற்பகல் 3.30 மணிக்கு திறக்கப்படும். முழு விவரங்களை இதே அலுவலகத்திலிருந்து அலுவல் நேரத்தில் இலவசமாகப் பெற்றுக் கொள்ளலாம்.

டிஏவிபி 635(1883)-81


## அவதூறு எழுதிய பத்திரிகை ஆசிரியருக்கு ஆறு மாதம் சிறைத் தண்டனை

லண்டன், ஜன. 13— அவதூறாக எழுதிய பத்திரிகை ஆசிரியர்ஒருவருக்கு லண்டன் நீதிமன்றம் ஆறு மாதம் சிறை தண்டனை விதித்தது.

பிரிட்டனில் இனவெறியைத் தூண்டும் முறையில் கட்டுரைகளை வெளியிட்ட தாகதேசிய முன்னணிகட்சியின் வார ஏட்டின் ஆசிரியர் மீது வழக்கு தொடரப்பட்டது. அந்த ஆசிரியரின் பெயர் ஜோசப் பியர்ஸ்.

இவர் மீது எட்டுக் குற்றச்சாட்டுகள் கூறப்பட்டன. குற்றச்சாட்டுகளுக்கு ஆதாரம் இருப்பதாகக்கூறி நீதிபதி ஆறு மாதம் சிறை தண்டனை விதித்தார்.

தீர்ப்பைக் கேட்டதும் "நீங்கள்பிரிட்டன்மக்களின் விரோதி' என்றுநீதிபதியை பார்த்து ஜோசப் பியர்ஸ் கூச்சலிட்டார்.

வெள்ளையர்கள் அல்லாத அனைவரையும் குறிப்பாக ஆசிய மக்களை பிரிட்டனை விட்டே வெளியேற்ற வேண்டும் என்பதனை வலியுறுத்தும் கட்டுரைகளை பியர்ஸ் வெளியிட்டு வந்தார்.

புத்தாண்டு நல்வாழ்த்துக்கள்
**Rajam Travels**
TOURIST CAR OPERATORS
"Day & Night Service"
MADRAS—600028
Phone : 77793
குறைந்த வாடகையில் இரவு பகல் எந்நேரத்திலும் சிறந்த வாடகை கார்கள் கிடைக்கும்
—கடலூர் துரை

# அண்ணா

பிளாக்குகள் செய்ய சிறந்த இடம்
லைன் ஆப்டோன் கலர்
குகா பிராசஸ்
☎ ....... 842606
No.19. பீரான் சாகிப் தெரு, அண்ணாசாலை, சென்னை-2

அதிசயப் பிறவி

## பாதிஉடல் பூனை - மீதி உடல் முயல்

ரஸ்அல்கைமா, ஜன. 13— பாதி உடல் பூனையைப் போலவும், மீதி உடல் முயலைப் போலவும் உள்ள ஒரு அதிசய பிராணி அரபு நாட்டில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

இந்தப் பிராணியின் தலை பூனையைப் போலவும், உடலும், கால்களும் முயலைப் போலவும் உள்ளது. இந்த அதிசய பிராணிதன் முன்னங்கால்களை உயர்த்தி பின்னங்கால்களால் நிற்கிறது. இதன் உணவுமாமிசம் சாதம், காய்கறிகள் ஆகியவை.

இந்த அதிசயப் பிராணியைப் பரிசோதிக்க பிரபல மிருக வைத்தியர்கள் அழைக்கப்பட்டனர்.

அவர்களால் இந்த அதிசய பிராணி எந்த வகையைச் சேர்ந்தது என்பதைக் கண்டறிய முடியவில்லை. இது குறித்து விஞ்ஞான ரீதியில் ஆராய்ச்சி செய்ய இந்தப் பிராணி அல் அய்னில் உள்ள ஐக்கிய அரபு எமிரேட் பல்கலைக் கழகத்திடம் ஒப்படைக்கப்பட்டது.

இந்தத் தகவலை அரபு நாடுகளிலிருந்து வெளிவரும் பத்திரிகை ஒன்று தெரிவித்துள்ளது. இந்த அதிசயப் பிராணியின் படத்தை அந்தபத்திரிகை பல கோணங்களில் படம் எடுத்துவெளியிட்டுள்ளது.

## சரத்பவார் இ. காங்கிரசில் சேருவாரா?

புதுடெல்லி, ஜன. 13— அந்துலே பதவி விலகியதைத் தொடர்ந்து சரத்பவார் இ. காங்கிரசில் சேருவார் என்று தெரிகிறது.

தேவராஜ் அர்சுக்குப்பின் காங்கிரஸ் (அர்ஸ்) கட்சி சரத்பவார் தலைமையில் இயங்கி காங்கிரஸ் (எஸ்) என்ற பெயரில் இயங்கி வருகிறது அல்லவா?

சமீபத்தில் கேரளாவில் இ. காங்கிரஸ் தலைமையில் கூட்டணி அமைச்சரவை அமைவதற்கு காங்கிரஸ் (எஸ்) உதவியை இ. காங்கிரஸ் நாடியது.

### காங்கிரஸ்(எஸ்) உடைந்தது

ஆனால் உதவ முடியாது என்று சரத்பவார் மறுத்து விட்டார். இதைத் தொடர்ந்து கேரளாவில் எஸ். காங்கிரஸ் உடைந்தது.

இப்போது பம்பாய் உயர்நீதி மன்றத் தீர்ப்பை யொட்டி அந்துலே முதல்வர் பதவியை இழந்துள்ளார்.

இதைத் தொடர்ந்து சரத்பவார் இ. காங்கிரசில் சேரக்கூடும் என்று டெல்லி வட்டாரச் செய்தி கூறுகிறது.

சரத்பவாருக்கு இ. காங்கிரசில் இன்னும ஆதரவாளர்கள் உள்ளனர்.

பயங்கர

## கடும்பனி குளிரால் சாமியார் மரணம்

சென்னை, ஜன. 13— சென்னை நகரம், மற்றும் சுற்றுப்புற மாவட்டங்களில் கடுமையான குளிர். அதோடு பனி கொட்டிய வண்ணம் இருக்கிறது.

இந்த பனி - குளிருக்கு சாமியார் ஒருவர் பலியாகி உள்ளார்.

செய்யாறு மணிக்கூண்டு அருகில் ஒரு கோவில் மண்டபத்தில் சாமியார் ஒருவரது சடலம் போலீசாரால் கைப்பற்றப்பட்டுள்ளது.

இரவில் வீசிய பயங்கர பனியில்நடுங்கிய சாமியார் குளிர் தாங்காமல் இறந்து இருக்கக் கூடும் என்று கருதப்படுகிறது. இவர் யார் என்ற விவரம் தெரியவில்லை.

நேற்றும் இன்றும் சென்னை நகரில் பயங்கரமாக பனி கொட்டிய வண்ணம் இருக்கிறது.

காலை 8 மணி வரை கூட பனி பெய்தவண்ணம் இருந்தது.

காலை நேரத்தில் கூட பனி மூட்டத்தால் வாகனங்கள் வருவது தெரியவில்லை.

காலை 8 மணிக்கு கூட வாகனங்கள் மஞ்சள் லைட் போட்டுச்சென்றன.

கல்கத்தாவில்

## ஜோதிர்மாய்பாசு உடல் தகனம்

கல்கத்தா, ஜன. 13— ஜெய்ப்பூரில் காலமான மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர் ஜோதிர்மாய்பாசுவின் உடல் டெல்லிக்கு கொண்டுவரப்பட்டு, பிறகு இன்று கல்கத்தாவிற்கு எடுத்து வரப்பட்டது.

மார்க்சிஸ்ட் கட்சித் தலைவர்களும் மற்றும் பல்வேறு கட்சித்தலைவர்களும் ஜோதிர்மாய்பாசுவின் உடலுக்கு மலர்வளையம் வைத்து அஞ்சலி செலுத்தினர்.

இன்று மாலை கல்கத்தாவில் ஜோதிர்மாய்பாசுவின் உடல் தகனம் செய்யப்படுகிறது.

ஜோதிர்மாய்பாசு மரணம்:

## புரட்சித் தலைவர் இரங்கல்

சென்னை, ஜன. 13— மார்க்சிஸ்ட் கட்சியின் தலைவர்களில் ஒருவரும், மக்கள் சபையின் உறுப்பினருமான ஜோதிர்மாய்பாசு ஜெய்பூரில் மாரடைப்பால்காலமானர்.

அவரது மரணத்திற்கு இரங்கல் தெரிவித்து, தமிழக முதல்வர் புரட்சித் தலைவர் மார்க்சிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளருக்கு தந்தி அனுப்பியுள்ளார்.

முதல்வர் புரட்சித் தலைவர் அனுப்பியுள்ள இரங்கல் செய்தியில் தெரிவித்திருப்பதாவது!

"ஜோதிர்மாய்பாசுவின் திடீர் மரணத்தைக் கேள்வியுற்று அதிர்ச்சி அடைந்தேன். நாடாளுமன்ற விவாதத்தில் தலைசிறந்த ஒருவரை நாடு இழந்து விட்டது. அடித்தளமக்களின் மேம்பாட்டிற்காக ஓங்கி ஒலித்த ஒரு குரல் ஓய்ந்து விட்டது. அவரை இழந்து தவிக்கிற அவரது குடும்பத்தாருக்கும்கட்சியினருக்கும் என் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் தனது இரங்கல் செய்தியில் தெரிவித்துள்ளார்.

## ஒழுக்கம் - அடக்கம் கட்டுப்பாட்டுடன் வாழ முயலுங்கள்

### பெண்கள் சீர்திருத்தப்பள்ளியில் அமைச்சர் கோமதி சீனிவாசன் அறிவுரை

சென்னை, ஜன. 13—நன்கு கல்விகற்று ஒழுக்கம், அடக்கம், கட்டுப்பாடு ஆகிய நல்ல குணங்களைக் கடைப்பிடித்து வாழ முயலுங்கள் என்று சீர்திருத்தப்பள்ளி பெண்களுக்கு, அமைச்சர் கோமதி சீனிவாசன் அறிவுரை நிகழ்த்தினர்.

சென்னை புரசைவாக்கத்தில் உள்ள அரசினர் முதுநிலை, இளநிலை பெண்கள் சீர்திருத்தப்பள்ளியில் பொங்கல் விழா நடைபெற்றது.

சமூக நலத்துறை அமைச்சர் கோமதி சீனிவாசன் விழாவுக்குத் தலைமை வகித்தார்.

சமூகநலத்துறை இயக்குனர் க. கோவிந்தராஜன் வரவேற்றுப் பேசினர். சீர்திருத்தப்பள்ளிகண்காணிப்பாளர் எஸ்.வி. சகுந்தலா ஆண்டு அறிக்கை வாசித்தார்.

அமைச்சர் கோமதி சீனிவாசன் பேசுகையில் கூறியதாவது:

சமுதாயத்தில் வாழ்க்கைத் தவறி, வறுமை பொருளாதாரத்தில் நலிவு ஆகிய பல்வேறு காரணங்களில் அவதியுற்ற பெண்கள் இந்தப் பள்ளியில் சேர்க்கப்படுகிறார்கள்.

பெண்கள் அனைவரும் தாழ்வு மனப்பான்மையை விட்டுவிட வேண்டும். பயிற்சிமுடிந்ததும் செம்மையான வாழ்க்கையில் அவர்கள் வாழவேண்டும். சீர்திருத்த பள்ளி மாணவிகளுக்கு பொது மக்கள் நல்வாழ்க்கையை அமைத்துத் தர முன்வர வேண்டும் வேலை வாய்ப்புகளில் அவர்களுக்கு முன்னுரிமை தரவேண்டும்.

மாணவிகள் நன்கு கல்வி கற்று ஒழுக்கம், அடக்கம், கட்டுப்பாடு ஆகிய நல்லொழுக்கத்தை கடைப்பிடித்து வாழ எப்போதும் முயல வேண்டும். சமுதாயத்தில் சிறந்த மக்களாக அவர்கள் உருவாக்கப்படவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் கோமதிசினிவாசன் பேசினர்.

## ஸ்பெயின்மன்னர்இந்தியாவருகை

புதுடெல்லி, ஜன. 13- ஸ்பெயின் நாட்டு மன்னரும், ராணியும் இந்தியாவில் 7 நாட்கள் சுற்றுப்பயணம் செய்ய வருகிறார்கள்.

ஜனாதிபதி சஞ்சீவ ரெட்டியின் அழைப்பினை ஏற்று ஸ்பெயின் நாட்டு மன்னர் டான்ஜான் கார்லோஸ்; ராணி சோபியா இருவரும் இம்மாதம் 25-ம் தேதிஇந்தியாவருகிறார்கள்

இந்தியாவில் 7 நாட்கள் சுற்றுப் பயணம் செய்கிறார்கள்.

குடியரசு தின விழாவில் பிரதம விருந்தினராக மன்னர் தம்பதிகள் கலந்து கொள்வார்கள்.

கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி
பொங்கல் சிறப்புத் தள்ளுபடி 20%

## "மனைவியை அடிக்கலாம்: காயம்படக் கூடாது"

குவெய்த், ஜன. 13— மனைவியைகணவன் அடிக்கலாம். ஆனால் மனைவிக்கு காயம் ஏற்படக் கூடாது என்றுகுவெய்த நாட்டிலுள்ள ஒரு நீதிமன்றம் தீர்ப்புக் கூறியது.

கணவன் தன்னை அடிப்பதாகக் கூறி மனைவி விவாகரத்து கோரி வழக்குத் தொடர்ந்தாள். அதை குவெய்த் உயர்நீதி மன்றம் விசாரித்து மனைவிக்கு விவாகரத்துக்கு அனுமதித்தது.

மனைவியை துன்புறுத்துவதை இஸ்லாம் அனுமதிக்கவில்லை. ஆனல் மனைவிக்கு காயம் ஏற்படாமல் அடிப்பதற்கு கணவனுக்கு உரிமை உண்டு என்று நீதிபதி தீர்ப்புக் கூறினர்.

புறநகர் ரயில்பிரிவில்

263 பேர்

## டிக்கெட் இன்றி பயணம்

சென்னை, ஜன. 13— புறநகர் ரயில்வே பிரிவில் கொரட்டூர் ரயில் நிலையத்தில் ரயில்வே அதிகாரிகள் 5 மணி நேரம் திடீர் சோதனை நடத்தினர்கள்.

இந்த சோதனையில் டிக்கெட் இன்றி பயணம் செய்த 263 பேர் பிடிபட்டனர். இவர்களில் 45பேர் பெண்கள். வர்களிடம் இருந்து ரூ.3784 வசூலிக்கப்பட்டது. 21 பேர்கள் மீது வழக்கு தொடரப் பட்டுள்ளது.

## சங்ககிரியில் கழகத் தோழர்கள் நடத்தும் பொங்கல் விழா

சேலம், ஜன. 13— சங்ககிரி பழைய எடப்பாடி சாலையில் 14.ந் தேதி காலை கழகத் தோழர்கள் கழகக்கொடி ஏற்றி வைத்து இனிப்பு பொங்கல் வழங்குகின்றனர்.

இரவு 8 மணிக்கு கே. ஆர். மோகன் தலைமையில் சேலம் கல்ச்சுரல் அகாடமியினரின் 'சந்திரோதயம்' என்ற நாடகமும் 'சாம்ராட் அசோகன்' என்ற ஓரங்க நாடகமும் நடைபெறுகிறது.

15-ந்தேதியன்றுசங்ககிரி சந்தை திடலில் 'நம்நாடு' திரைப்படம் திரையிடுகிறார்கள்.

நிகழ்ச்சியில் கே.பி.ராமலிங்கம் எம். எல். ஏ., பி. தனபால்எம். எல். ஏ., தேவராஜன், கிருஷ்ணன், காளியப்பன், சலாவுதீன் ஆகியோர் பங்கேற்கிறார்கள்.

9வது அகில இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சி '82
தீவுத்திடல் - சென்னை.

பல இலட்சக் கணக்கான மக்கள் ஆவலுடன் எதிர் பார்த்திருந்த மகத்தான பொருட்காட்சி... காஷ்மீர், இமாசலப் பிரதேசம், அரியானா, கர்னாடகா மற்றும் பல மாநிலங்களின் பிரமாண்டமான அரங்குகள்... மாபெரும் கைத்தறி, கைவினைப் பொருள் விற்பனை நிலையங்கள்... பொழுதுபோக்கு அம்சங்கள் பல... நாள்தோறும் கலை நிகழ்ச்சி மற்றும் திரைப்படம்.

பொங்கல் விழா சிறப்பு நிகழ்ச்சிகள்

| | அறிஞர் அண்ணா கலையரங்கம் | திறந்தவெளி திரையரங்கம் |
|---|---|---|
| 13.1.82 (போகி) | செல்வி ஸ்வர்ணமுகி அவர்களின் பரத நாட்டியம் | "ராஜா" (கலர்) சிவாஜி, ஜெயலலிதா நடித்தது. |
| 14.1.81 (பொங்கல்) | ராஜ்-சீதாராமனின் "சுருதிலயா" மெல்லிசை | "நவரத்தினம் (கலர்) எம்.ஜி.ஆர்., லதா, ஸ்ரீபிரியா நடித்தது. |
| 15.1.82 (திருவள்ளுவர் நாள்) | குமாரி சச்சு குழுவினர் நடிக்கும் "தோப்பில் தனிமரம்" நாடகம் | "தனிப்பிறவி" எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா நடித்தது |
| 16.1.82 (உழவர் திருநாள்) | நிருத்தியாஞ்சலி அளிக்கும் சித்ரா குழுவினரின் "வள்ளித் திருமணம்" நாட்டிய நாடகம் | "தங்கை" சிவாஜி. K.R. விஜயா நடித்தது. |
| 17.1.82 (ஞாயிறு) | ஹெரான் ராமசாமி குழுவினர் நடிக்கும் "சனீஸ்வரர்" பாகம் II | "பைரவி" ரஜனிகாந்த், ஸ்ரீபிரியா நடித்தது |

மலிவான விலையில் சுவையான உணவு வகைகள் அருந்த சிறந்த இடம்
"ஓட்டல் தமிழ்நாடு"
(அகில இந்திய சுற்றுலா மற்றும் தொழில் பொருட்காட்சியில்) தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம் நடத்தும் உணவு விடுதி.

தினசரி மாலை 2.00 முதல் இரவு 10.00 வரை, பொங்கல் விடுமுறை நாட்களான ஜனவரி 13 முதல் 17 வரையிலும் மற்றும் விடுமுறை நாட்களிலும் காலை 10.00 மணி முதல் இரவு 10 மணி வரை.

பொருட்காட்சி முடிந்த பிறகு பஸ் வசதி உண்டு.

ரசிகப் பெருமக்களுக்கும், விநியோகஸ்தர்களுக்கும் எங்களது இனிய பொங்கல் வாழ்த்துக்கள்!

இன்று முதல்...
தேவிபாரடைஸ் A/c
கிரவுன் (தினசரி 3 காட்சிகள்)
பைலட் A/c - ராம்
மேகலா (பகல் 11-30 மணிக் காட்சி)
தமிழகம் தென்னகமெங்கும்
ரோஸ் ஆர்ட்ஸ்
மெட்டி
மகேந்திரன்
அசோக்குமார். இளையராஜா B. லெனின்
art ads
பைலட் A.C யில் 23.1.82ந் தேதி முதல் தினசரி 3 காட்சிகளாக நடைபெறும்

விநியோகஸ்தர்கள்:—
★ சென்னை நகரம் — ஹஸார் மூவீஸ், சென்னை
★ கோவை, நீலகிரி — ஸ்ரீ கன்னியா பிலிம்ஸ், கோவை
★ திருச்சி, தஞ்சாவூர் — சோழா பிலிம்ஸ், திருச்சி
★ மதுரை, இராமனுநபுரம் — அழகர் மூவீஸ், மதுரை
★ சேலம், தாமபுரி — ஸ்ரீ ராஜலட்சுமி புரொடக்ஷன்ஸ் பி (லிட்) சென்னை
★ கர்னாடகா மாநிலம் — மூவீஎக்ஸ்போர்ட்டர்ஸ் சென்னை.

# அண்ணா வழங்கும் பொங்கல் சிறப்பிதழ்

## கனவுகளும் நினைவுகளும்...

**ஆர். பாலு**

காலஓட்டத்தில் ஜீரணமாகி போய்விட்ட நினைவுகள்—

பொங்கலாய் பொங்கி மலரும் நினைவுகள்—

இன்று எத்தனையோ மாறுதல்கள், பல பழக்க வழக்கங்கள் சிதிலமாகி கனவாய் போனது.

பொங்கல் திருநாள் வருகிறது என்றாலே உற்சாகம் தான்.

மார்கழி மாதத்து அதிகாலை பனியில்-எழுந்து வீட்டு வாசலில் போடப்படும் பெரிய பெரிய மாக்கோலங்களை ரசித்த நினைவுகள் பனிப் படலமாய் மறைய—

பரங்கிப் பூக்களின் கொலு தோன்றுகிறது.

பொங்கல் திருநாளுக்கு ஒரு வாரத்திற்கு முன்பே வீட்டைச் சுத்தப்படுத்தி வெள்ளையடிக்கும் வேலை நடக்கும்.

நானும் வெள்ளையடிக்க தென்னைமட்டை நாரால் ஆனபிரஷ்ஷால் முயன்று கை எரிச்சல் பட்டது இன்று மீண்டும் ஏற்படாதா என ஏங்குகிறேன்.

மார்கழி மாத கடைசி வாரத்திலேயே அறுவடை தொடங்கிவிடும்.

களத்து மேட்டில் இருந்து மாட்டு வண்டியில் மூட்டைகளாய் வரும் நெல்.

அந்த வண்டியில் ஏறி மூட்டைகளோடு மூட்டைகளாய் ஓ... கால ஓட்டத்தில் வடுவாகி விட்ட சம்பவங்கள்.

பொங்கலுக்கு முதல் நாள். போகியன்று — காலமெல்லாம் உழைத்த உழவர்கள்வருவார்கள்.

பொங்கல் திருநாளுக்கு வேண்டிய மஞ்சள் கொத்து, காய்கறிகள் போன்ற பொருட்களை உழவர்கள் கொண்டு வருவார்கள்.

பசுமையாய் செழித்த அந்த வளமை நினைவுகள் மாறவில்லை. ஆனால்—

இன்று அந்த வழக்கங்கள் எல்லாம் மாறிப் போய் விட்டன.

கரும்பும், மஞ்சளும் இஞ்சியும் வைத்து, புத்தரிசி கொண்டு பொங்கலிட.

அதை தூணோரம் நின்று அரை நிர்வாணமாய் ரசித்து—

இந்தப் பொங்கல் எப்போது பொங்கும், "பொங்கலோ பொங்கல்" என கூவலாம் என ஆவலாய் நிற்பதே தனி அனுபவம்தான்.

பொங்கலின் போது ஊரே மணி ஓசையால் கிடுகிடுக்கும்.

வீடுகள் தோறும் மாடுகள் நிறைய இருந்த காலம்.

மாடுகளுக்கு எல்லாம் மணிகள் கட்டி, அவை காலையில் மேய்ச்சலுக்கு சென்று மாலையில் திரும்பும் போது எழுப்பும் ஓசையே கிராமத்து ஜீவனாய் இருக்கும்.

பொங்கல் கூவி பொங்கல் இட்டு படையல் போட்டு—முதலில் காகங்களுக்கு கூவி கூவியழைத்து வைத்து, எங்கும் மங்கலமாய் மகிழ்ச்சிக் கடலில் நீந்தி கற்கண்டு பொங்கல் சாப்பிட்ட கிராமம் இன்று இருக்கிறது.

ஆனால்—

இன்று கால மாறுதலாய் பொங்கல்திருநாளும் மாறிவிட்டது.

பொங்கலுக்கு மறுநாள் உழவர்களின் வாழ்விற்கு உறுதுணையாய் நின்ற மாடுகளுக்கு வழிபாடு.

வைக்கோலை சாலையின் குறுக்கே பரப்பிதிவைத்து அலங்கரிக்கபட்ட காளை மாடுகளை தீயின் குறுக்கே விரட்டி செல்லுவார்கள்.

தப்பு—தாரைகள் முழங்க, பொங்கலோ பொங்கல் என்ற கோஷம் விண்ணதிர தீ பிழம்பில் காளைகள் பாய்ந்து செல்லும் காட்சிகளை திகில் படர்ந்த கண்களுடன் ஜன்னலில் நின்று பார்க்க இன்று நினைத்தாலும் பார்க்கமுடியாத ஒன்றாய்போய்விட்டது.

ஆம். 15 ஆண்டுகளில் மாடுகளும் மனிதர்களும் நிலைக்க— மற்றவைகளும் மறைந்து விட்டன.

காணும் பொங்கல்-அன்று கிராமத்து இளம் பெண்களுக்கு கொண்டாட்டம், புத்தாடை உடுத்தி காளையர் மனம் களிக்க பெண்கள் உறவினர் வீடுகளுக்குச் செல்லுவதும், —இப்படி எத்தனையோ.

அன்று மாலை, கிராமத்து இளைஞர்களோ, வீர விளையாட்டுகளைக் விளையாடிக் காட்டுவார்கள்.

சிலம்பம் ஆடி, சுற்றி சுழலமனம் அந்நாளை அசைபோடுகிறது.

கிராமிய பாடல்களுக்கு ஏற்ப கூத்து நடக்க, ஆண்களும் பெண்களும் கூடியிருந்து வேடிக்கை பார்க்க.

அங்கு ஜாதி பேதங்கள் ஓடி ஒளிந்த காட்சிகள் நெஞ்சில் நிறைந்த காட்சிகளாய் உள்ளன.

இப்படி, பொங்கல் என்றால் நான்கைந்து தினங்கள் கிராமத்து பேதங்கள்-வேற்றுமைகள். ஜாதி பேதங்கள் மறைய-பொங்கலை பொங்கி வழிந்த அந்த தஞ்சை மாவட்டத்து சிற்றூரிலும்—கால வெள்ளத்தின் அடிச்சுவடுகளாய் அந்த வழக்கங்கள் மறைத்துவிட்டன.

இன்றைய அவசர வாழ்க்கையின், —பாதிப்புகள் அந்த ஊரையும் விட்டு வைக்கவில்லை.

நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்ப பொங்கல் கொண்டாட்டங்களிலும் எவ்வளவோ மாறுதல்கள்.

மாறிவரும் உலகத்திற்கு ஏற்ப தன்னையும் மாற்றிக் கொண்டது அவ்வூர். ஆம். அந்த கிராமம் மட்டுமல்ல, தமிழகத்து கிராமங்களில் சமூக மாறுதல்கள் ஏற்பட்டுவருகின்றன.

அந்த நினைவுகள்—அந்த வளம் கொண்ட தமிழக மக்கள், வாழக்கையின் இடையில் ஏழாண்டுக் காலம் கருகிப் போனதில்-நானும் ஒருவனாய்சென்னையின்மக்கள் கடலில்மூழ்கிப் போனேன்.

இன்று—

புரட்சித் தலைவரின் ஆட்சியில் கிராமங்கள் மீண்டும் உயிர் பெற்று வளரும் காட்சி—இனிமையாய்தெரியும் வேளையில்—பொங்கல் கொண்டாடுகிறோம்.

மீண்டும் ஒரு நாள், அதுவும் விரைவிலேயே கிராமங்களில் மணி ஓசை ஓங்கி ஒலிக்க—சிலம்பு கம்புகள் மோதிட கூத்துகள் நடந்திட வேற்றுமைகள் மறைந்திட—

ஒன்றாய்—
கூட்டமாய்—
உழவர்கள்

பொங்கலைக் கொண்டாடும் கனவுகள் நினைவுகளாக மாறட்டும்.



## "எங்கும் பொங்குக!"

தையிலே பொங்கல் பொங்க — நேர்
பாதையில் இருளும் நீங்கும்.

உழவினில் வறுமை வென்றே — நல்
வாழ்வினில் பெருமை கொள்வோம்.

உழைத்திடும் உறுதி தன்னில் — நன்கு
தழைத்திடும் வாழ்வு மண்ணில்.

உடமைகள் காத்து நின்றே — நல்ல
கடமைகள் காலம் செய்வோம்.

நல்லவை நாளும் செய்தே — நம்
வல்லமை காட்டி நிற்போம்.

ஒற்றுமை நம்மில் காத்து — பகை
அற்றிட நலமும் சேர்ப்போம்.

தரித்திர நிலைகள் வீழ்த்தி — புது
சரித்திரம் படைத்து வாழ்வோம்.

வேற்றுமை யாவும் மறைய — கூடி
போற்றுவோம் தமிழர் திருநாளை!

— கவிஞர் சீர்காழி தமிழன்பன்.


ஸ்பிக் கூறும் இனிய பொங்கல் வாழ்த்துக்கள்

கழனியிலே விளைச்சல் பொங்க—
அந்தக் களிப்பினிலே இதயம்
பொங்க—மண்கலத்தினிலே
பால்பொங்கும் வேளையிலே—
உழவர் நலத்தினிலே நாட்டம் கொண்ட
ஸ்பிக் அளிக்கும் பொங்கல்
நல்வாழ்த்துக்கள்.

SPIC
ஸதர்ன் பெட்ரோகெமிகல்
இண்டஸ்ட்ரீஸ்
கார்ப்பொரேஷன்
லிமிடெட்
"ஸ்பிக்" செண்டர்,
97, மவுண்ட் ரோடு,
சென்னை-32.






உணவு மக்களின் தலையாய தேவையாகும்.
இதை மக்களுக்குக் கிடைக்க வழிவகுப்பதே அரசாங்கத்தின் பொறுப்பாகும்.
மக்களுக்கு ஆண்டு முழுவதும் குறித்த காலத்தில், நியாய விலையில் உணவுப் பொருட்கள் கிடைக்கும் பொருட்டு 1965-ம் ஆண்டு இப்பொங்கல் நன்னாளில் இந்திய உணவு கார்ப்பொரேஷன் நிறுவப்பட்டது.

இந்திய உணவு கார்ப்பொரேஷன் நிலையான பசுமைப் புரட்சியைக் கருத்தில் கொண்டு, அரசு அவ்வப்போது நிர்ணயிக்கும் விலையை விவசாயிகளுக்கு வழங்கி பயன் அடையச் செய்கிறது.

இந்திய உணவு கார்ப்பொரேஷன் தானியங்களைக் கொள்முதல் செய்தல், சிறந்த முறையில் பாதுகாத்தல், தொலை தூரத்தில் உள்ள மாநில அரசு நிறுவனங்களுக்கு அடக்க விலைக்கும் குறைவாகக் கிடைக்கச் செய்தல் போன்ற மகத்தான பணிதனைப் புரிகிறது. அடக்க விலைக்கும் நுகர்வோர் விலைக்கும் உள்ள வேறுபாட்டை அரசு ஏற்றுக் கொண்டு நுகர்வோர்க்கு சேவை செய்கிறது. உணவுத் தட்டுப்பாட்டின் போது உரிய இடத்திற்கு போதுமான அளவு உணவு தானியங்களை அனுப்பி தேவையை பூர்த்தி செய்கிறது. கடந்த ஆண்டில் மட்டும் 140 லட்சம் டன்னுக்கும் மேலாக உணவு தானியங்களை நுகர்வோர்க்கு விநியோகித்தது இதுவரை இல்லாத சாதனையாகும்.

இந்திய உணவு கார்ப்பொரேஷன் இப்பொங்கல் நன்னாளில் மக்களுக்கு வாழ்த்துக்கூறி அவர்களின் சேவைக்கு மீண்டும் தன்னை அர்ப்பணித்துக் கொள்கிறது

இந்திய உணவு கார்ப்பொரேஷன்

'கங்கை நதிப்புறத்து கோதுமைப் பண்டம்
காவிரி வெற்றிலைக்கு மாறு கொள்வோம்'
— பாரதியார்

எங்கள் பிறந்த நாளில்
உங்களுக்குக் கூறுகிறோம்
பொங்கல் வாழ்த்து!








# ஆவின்

பால நுகர்வோர் கூட்டுறவு சங்கங்களின் துவக்க விழா

தேதி : 14—1—82 நேரம் : மாலை 6 மணி

இடம்; 36.1, மேற்கு கல்மண்டபம் சாலை, ராயபுரம், சென்னை-600 013

(கல்மண்டபம் தொலைபேசி தொடர்பகத்துக்கு அருகில்)

மாண்புமிகு திரு. கே. ஏ. கிருஷ்ணசாமி எம். ஏ. பி.எல

தமிழ்நாடு ஊரகத் தொழில் துறை மற்றும் பால்வள மேம்பாட்டுத்துறை அமைச்சர் அவர்கள்

முதல் ஐந்து கூட்டுறவு சங்கங்களை துவக்கி வைப்பார்கள்!

அனைவரும் வருக!

DIPR/NAS.


# திருவள்ளுவர் திருநாள்: புரட்சித்தலைவர் பங்கேற்பு

சென்னை, ஜன. 13— சென்னை வள்ளுவர் கோட்டத்தில் தமிழக அரசின் சார்பில் திருவள்ளுவர் திருநாள் 15-ந்தேதியன்று கொண்டாடப்படுகிறது.

இவ்விழாவில் தமிழக முதலவா புரட்சித்தலைவர் கலந்து கொண்டு சிறப்புரையாற்றுகிறார்.

15-ந்தேதியன்று காலை இசைக் கல்லூரி மாணவர்களின் இசை நிகழ்ச்சியுடன் திருவள்ளுவர் திருநாள் துவங்கப்படுகிறது. 10-மணிக்கு கல்வித் துறைசெயலர் சி. ராமதாஸ் வரவேற்புரை நிகழ்த்த செய்தி அறநிலையத்துறை அமைச்சர் ஆர். எம். வீ. கருத்தரங்கைத் தொடங்கி வைக்கிறார்.

கருத்தரங்கிற்கு குன்றக்குடி அடிகளார் தலைமை வகிக்கிறார். தமிழண்ணல் ஆறு. அழகப்பன், தெ. ஞானசுந்தரம் ஆகியோர் பங்கு கொள்கின்றனர்.

மாலையில் பேராசிரியர் பரந்தாமனார் தலைமையில் நடைபெறும் 'உரைகல்' நிகழ்ச்சியில்நாரணதுரைக் கண்ணன், அகிலன், வெ. நல்லதம்பி, அண்ணா நாளிதழ்ஆசிரியர் எ. பரசுராமன், நக்கீரன் ஆகியோர் பங்கேற்கிறார்கள்.

அமைச்சர்அரங்கநாயகம் தலைமையில் நடக்கும் நிறைவு விழாவில் நிதியமைச்சர் நாவலர் சிறப்புரையாற்றுகிறார்.

இறுதியில் முதல்வர் புரட்சித்தலைவர் சிறந்த நூல்களுக்கு பரிசுகள் வழங்கி நிறைவுரையாற்றுகிறார்.

அரசு நர்த்தகி சுவர்ணமுகியின் பரத நாட்டியம் நடைபெறுகிறது. மா. நன்னன் நன்றி கூறுகிறார்.


★ பொங்கி மலரட்டுமே ★

புத்துலகம் படைத்திடவே போர் புரியும் நம் தலைவர்
புரட்சிப் படை வெற்றி பல ஈட்டட்டுமே
புதுப்பானை தனில் பொங்கி மலாகின்ற பொங்கல்போல்
புது வாழ்வு இனிதாக பொங்கட்டுமே!

என்று இனிய பொங்கல் வாழ்த்தளிக்கும்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம்
103-வது வட்டம், சென்னை.14

V. C. ராமகிருஷ்ணன் — வ.அ.தலைவர், கழக பேச்சாளர்
D. பாஸ்கரன் — வ. செயலாளர்
T. M. கோவிந்தசாமி — வ. பொருளாளர்
C. தனசேகரன் — வ. து. செயலாளர்

மற்றும்
மேலமைப்பு — மாவட்ட பிரதிநிதிகள்,
சார்பு மன்ற நிர்வாகிகள்


# செங்கற்பட்டு மாவட்டத்தில் புதிய காகிதத் தொழிற்சாலை

## அமைச்சர் திருநாவுக்கரசு அறிவிப்பு

**மதுராந்தகம், ஜன. 13— செங்கற்பட்டு மாவட்டம் மதுராந்தகம் பகுதியில் சுமார் 5 ஆயிரம் டன் காகிதம் உற்பத்தி செய்யக்கூடிய புதிய காகித ஆலை ஒன்று அமைக்கப்படவிருக்கிறது என தொழில் அமைச்சர் திருநாவுக்கரசு அறிவித்தார்.**



மதுராந்தகம் கூட்டுறவு சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களுக்கு பரிசளிப்பு விழா, படாளத்தில் உள்ள ஆலை ஊழியர் குடியிருப்பு திறப்பு விழா, குடியிருப்பு விழா ஆகியவை நேற்று நடைபெற்றன.

இந்த விழாக்களுக்கு செங்கற்பட்டு மாவட்ட ஆட்சித்தலைவர் ராமச்சந்திரன் தலைமை வகித்தார்.

ஆலையின் தனி அதிகாரி ராஜரத்தினம் வரவேற்றுப் பேசினார். அச்சிறுபாக்கம் தொகுதி எம். எல். ஏ. கணேசன், மதுராந்தகம் தொகுதி எம்.எல்.ஏ. உக்கம்சந்த், வந்தவாசி தொகுதி எம்.எல்.ஏ. குப்புசாமி, முன்னாள் எம். எல். ஏ., பாக்கூர் சுப்ரமணியம், அண்ணா தொழிலாளர் பேரவைத தலைவர் வை. பெருமாள் மற்றும் தொழிலாளர் தலைவர்கள் பலரும் விழாவில் கலந்து கொண்டு பேசினர்.

ரூபாய் 2 லட்சம் செலவில கட்டப்படவிருக்கும் ஆரம்பப் பள்ளிக்கூடம், உயர்நிலைப் பள்ளிக்கூடத்துக்கு கூடுதல் கட்டிடம் ஆகியவற்றிற்கு தமிழக அரசு விவசாயிகள் உயர் மட்டக்குழுத்தலைவர் முனு ஆதி அடிக்கல் நாட்டினா.

அமைச்சர் திருநாவுக்கரசு பேசுகையில் கூறியதாவது:

### புதிய காகித ஆலை

தமிழகத்தில் உள்ள அனைத்துக்கட்சி எம். பிக்களும் தமிழகத்தின் வளர்ச்சிக்கு பாடுபட வேண்டும். தமிழகத்தில் தொழில்கள் தொடங்க லைசென்ஸ் போன்றவைகளை மத்திய அரசிடம் வாதாடி பெற்றுத் தர வேண்டும்.

மதுராந்தகம் தொகுதி எம், எல். ஏ. உக்கம்சந்தின் உற்சாகம் காரணமாக இந்தப் பகுதியில் 5 ஆயிரம் டன் காகிதம் உற்பத்தியாகக்கூடிய காகித ஆலை ஒன்று அமைக்கப்படவிருக்கிறது. சிறுதொழில் நிறுவனத்தின் சார்பில் பாலித்தீன் பைகள் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றும் கூட்டுறவு முறையில் துவங்கப்படவிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் திருநாவுக்கரசு கூறினார்.

சர்க்கரை ஆலை அலுவலக மேலாளர் ஜனார்த்தனம் நன்றி கூறினார்.

ராயபுரத்தில் கூட்டுறவு சங்கம்:

# அமைச்சர் கே.ஏ.கே.வுக்கு நன்றி

சென்னை, ஜன. 13— சென்னைராயபுரம்தொகுதியில் பால் நுகர்வோர் கூட்டுறவு சங்கம் அமைத்ததற்கும் அந்த தொகுதியில் பல்வேறு வசதிகள் செய்து கொடுத்ததற்கும் ஊரகதொழில் துறைஅமைச்சர் கே.ஏ.கே. வுக்கு18வது வட்டக் கழகத்தின் சார்பில் அவைத் தலைவர் "அலைஓசை" சண்முகம் நன்றி தெரிவித்துள்ளார்.

# பம்பாயில் பிஸ்கட் தின்ற 150 குழந்தைகள் மயக்கம்

பம்பாய், ஜன. 13— பம்பாயில் உள்ள ஒரு மாநகராட்சி பள்ளியில் வழங்கப்பட்ட பிஸ்கட்டுகளைத் தின்ற 150 குழந்தைகள் வாந்தி மயக்கத்துடன் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளன. பிஸ்கட்டுகளை தின்ற அரை மணி நேரத்தில் அந்தக்குழந்தைகள் வாந்தி எடுத்து மயங்கி விழுந்தன. அச்சமயம் ஆம்புலன்ஸ் வண்டி கிடைக்காததால் தனியார் வண்டிகள் மூலமும்டாக்சிகள்மூலமும் ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் செல்லப்பட்டனர். இதில் 9 குழந்தைகளின் உடல் நிலை கவலைக்கிடமாக உள்ளதாகத் தெரிகிறது. இச்சம்பவத்தை யொட்டி மாநகராட்சிக் கூட்டம் 5 நிமிடம் ஒத்திவைக்கப் பட்டது.

ரெயிலைக் கவிழ்க்க சதி:

# ரெயில் பாதையில் நாசவேலை

திருச்சி, ஜன. 13— திருநெல்வேலி— சென்னை எக்ஸ்பிரஸ்ரெயில்வாளாடி ரெயில் நிலையம் அருகே வந்துகொண்டிருந்தபோது திடீரென தண்டவாளத்தின் மீது இருந்த இரும்பு பைப் ஒன்றின்மீது மோதி நின்றது.

ரெயில்வே சிக்னலின் அடிப்பகுதியான அந்த இரும்பு பைப்பை தண்டவாளத்தின் மீது யாரோ வேண்டுமென்றே வைத்திருக்க வேண்டும் எனக் கருதப்படுகிறது.

இந்த நாசவேலைகுறித்து போலீசார் விசாரணை நடத்தி வருகிறார்கள்.


நெடுஞ்சாலை ஊரகப்பணித்துறை



# ஒப்பந்த அறிவிப்பு

எண்: 1.82-வ 1 நாள்: 5-1-82

தமிழ்நாடு ஆளுநர் அவர்களுக்காகவும் ஆளுநர் சார்பில் திருநெல்வேலி வட்டம் (நெடுஞ்சாலை ஊரகப்பணித்துறை) கண்காணிப்புப் பொறியாளர், எண். 2, சர்வஞான தெரு பாளையங்கோட்டை, திருநெல்வேலி-2 அவர்களால் கீழ்க்கண்ட வேலைகளுக்கு மூடி அரக்கு முத்திரையிட்ட ஒப்பந்தப் புள்ளிகள் 10-2-82 பிற்பகல் 3.00 மணி வரை (அலுவலககடிகாரப்படி) கோரப்படுகிறது. வரப்பெற்ற ஒப்பந்தப் புள்ளிகள் அதே நாள் 10-2-1982 பிற்பகல் 3.15 மணிக்கு கண்காணிப்புப் பொறியாளர் (நெ. ஊ. ப) திருநெல்வேலி-2 அவர்களால் திறக்கப்படும்.

| வரிசை எண் | வேலையின் பெயர் | முன்வைப்புத் தொகை | ஒப்பந்தக்காரர்களின் தகுதி | ஷெட்யூல் கிடைக்கும் இடங்கள் |
|---|---|---|---|---|
| I | சாத்தூர் (நெ. ஊ. ப.) கோட்டம் (முதல் அழைப்பு) சிவகாசி—விருதுநகர் சாலையை அகலப் படுத்துதலும் கற்கள் விரித்தலும் (நீளம் 22.4. கி. மீ.) | | | |
| 1. | முதல் பகுதி கி. மீ. 4..0-10-0 | ரூ. 4,100. | இரண்டாம் வகுப்பு (ரூபாய் நான்கு லட்சத்திற்கு மேல்) | கோட்டப் பொறியாளர் (நெ. ஊ. ப. சாத்தூர் |
| 2. | இரண்டாம் பகுதி கி. மீ. 10.0-16.0 | ரூ. 4,075. | — ஷை — | — ஷை — |
| 3. | மூன்றாம்பகுதி கி.மீ.16.0-19.0 | ரூ. 3,200. | இரண்டாம் வகுப்பு (ரூபாய் மூன்று லட்சத்திற்கு மேல்) | — ஷை — |
| 4. | நான்காம்பகுதி கி.மீ.19.0,23.4 | ரூ. 3,300. | — ஷை — | — ஷை — |
| II | நாகர்கோவில் (நெ. ஊ ப.) கோட்டம் (முதல் அழைப்பு) | | | |
| 5. | இலந்தையம்பலம்- மெய்கோடு சாலையில் கி.மீ. 1.4ல் உள்ள பாலத்தை திரும்பக் கட்டுதல். | ரூ. 4,600. | இரண்டாம் வகுப்பு (ரூபாய் 4.50 லட்சத்திற்கு மேல்) | கோட்டப் பொறியாளர் நெ.ஊ.ப.து. நாகர்கோவில் |
| III | சிவகங்கை (நெ. ஊ. ப.) கோட்டம் (முதல் அழைப்பு) | | | |
| 6 | பெரம்பலூர் - மானமதுரை சாலை கி. மீ. 221-4 லிருந்து வேலூர் (Velur) செல்லும் சாலையை அமைத்தலும் அபிவிருத்தி செய்தலும் (இராமநாபுரம் மாவட்டம்) | ரூ. 4,750. | இரண்டாம் வகுப்பு (ஐந்து லட்சமும் அதற்கு மேலும்) | கோட்டப் பொறியாளர் (நெ. ஊ. ப.. சிவகெங்கை) |
| IV | கப்பலூர்—ஏம்பல் சாலை கி. மீ. 5.4 லிருநது குடிக்காடு செல்லும் சாலையை அமைத்தலும் அபிவிருத்தி செய்தலும் கி. மீ. (0-0.5.460) கண்ணன்குடி பஞ்சாயத்து யூனியனில் உள்ள பெருங்கானூருக்கு சாலை அமைத்தலும் அபிவிருத்தி செய்தலும் (கி. மீ. 0.0.0.560) (இராமநாதபுரம் மாவட்டம்) | | | |
| 7 | முதல் பகுதி கி. மீ. 0-0.2.0 (குடிக்காட்டிற்கு செல்லும் சாலை) | ரூ. 3,250. | இரண்டாம் வகுப்பு (ரூபாய் மூன்று லட்சத்திற்கு மேல்) | — ஷை — |
| 8. | இரண்டாம்பகுதி கி.மீ.2.0.4.0 (குடிகாட்டிற்கு செல்லும் சாலை) | ரூ. 3,675. | இரண்டாம் வகுப்பு (ரூபாய் 3.50 லட்சத்திற்கு மேல்) | — ஷை — |
| 9. | மூன்றாம் பகுதி கி.மீ. 4.0 5.460(குடிக்காட்டிற்கு செல்லும் சாலை) கி.மீ. 0.0.0.560 (பெருங்கானூருக்கு செல்லும் சாலை). | ரூ. 3,650. | — ஷை — | — ஷை — |

ஒப்பந்த புள்ளிகள், நிபந்தனைகள், வரைபடங்கள் ஆகியவற்றை அட்டவணையில் குறிப்புடன் கோட்டப்பொறியாளர் (நெ) அவர்களது அலுவலகத்தில் மேற்படி வேலைக்கு ரூ. 104.20 விற்பனை வரி, சர்சார்ஜ் உட்பட (திருப்பித்தரப்படமாட்டாது) செலுத்தி அலுவலக நாட்களில் அலுவலக நேரத்தில் 30.1.82 முதல் 9.2.82 முடிய விண்ணப்பித்துப் பெற்றுக் கொள்ளலாம்.

ஒப்பந்தப் புள்ளிகள் பத்திரங்கள் போதுமான பண உச்சவரம்பில் பதிவு செய்துள்ள ஒப்பந்தக்காரர்களுக்கு மட்டும் கொடுக்கப்படும்.

முன்வைப்புத்தொகை, பின்வைப்புத் தொகை இவைகளுக்கு பாங்க் கியாரண்டிகள் ஏற்றுக்கொள்ளப்படமாட்டாது.

சீ. மு. சுப்ரமணியன்.
கண்காணிப்புப் பொறியாளர் (நெஊப)
திருநெல்வேலி-2

DIPR.6/82:6/maa.



பொங்கல் இனித்திட
நீங்கள் சுவைத்திடுவீர்
அகர்வால்பவன்
இனிப்புகளே!



அகர்வால் பவன்
128, கோவிந்தப்ப நாயக்கன் தெரு,
சென்னை 600 001. போன்: 21219, 31349



இரண்டு கோடியே எண்பது லட்சத்துக்கும் மேற்பட்ட தம்பதிகள்

இன்று இந்தியாவில் தமது குடும்பத்தை

திட்டமிட்டுக்கொண்டு

சிறந்து வாழுகின்றனர்!

நீங்களும் அவர்களுள் ஒருவரானல்,
உங்கள் அருகிலிருப்பவருக்கும் சொல்லுங்கள்:
இல்லையென்றால்,
இன்றே துவங்குங்கள்



சிறிய குடும்பம்
இன்பம் நிறைந்த குடும்பம்

davp 81/



## திருநாளாம் பெருநாளாம்

இப்பொங்கல் புதுநாளில்
மக்கள் யாவரும் நலம் பெருகி
நல்வாழ்வு பெற்றிட
எமது மனமார்ந்த நல்வாழ்த்துக்கள்!



டியூப் இன்வெஸ்ட்மென்ட்ஸ் ஆஃப் இந்தியா லிமிடெட்
சென்னை 600 001
சைக்கிள்கள், சைக்கிள் சீட்கள், செயின்கள், டைனமோ
லாம்ப் செட்டுகள், எஃகு குழாய்கள், மெட்டல்
செக்‌ஷன்கள் மற்றும் 'Z' பர்லின்கள் தயாரிப்பாளர்கள்



Imageads M. Ti. 1511


# தமிழ்நாட்டில் 65 லட்சம் டன் நெல் உற்பத்தி

## அமைச்சர் காளிமுத்து தகவல்

மதுரை, ஜன. 13—தமிழ்நாட்டில் இந்த ஆண்டு நெல் உற்பத்தி 65 லட்சம் டன்னாக இருக்கும் என்று அமைச்சர் காளிமுத்து கூறினார்.



மதுரை மாவட்டம் ஒட்டன்சத்திரம், மஞ்சநாயக் கன்பட்டி வட்டாரங்களில் பயிர் சாகுபடி நிலைமைகளைக் கண்டறிய அமைச்சர் காளிமுத்து சென்றார்.

### நிருபர்களுக்கு பேட்டி

பின்னர் பழனியில் அவர் நிருபர்களிடம் கூறுகையில் "இந்த ஆண்டு நெல் உற்பத்தி 65 லட்சம் டன்னாக இருக்கும்" என்று நம்பிக்கை தெரிவித்தார். எல்லா இடங்களிலும் மழை ஒரே சீராக நல்ல முறையில் பெய்திருப்பதே இதற்குக் காரணம் என்று அவர் சொன்னார்.

### குறைந்த வாடகையில் டிராக்டர்

நிலவள வாரியம் சிறிது காலமாக இயங்காமல் இருந்தது. சென்ற மாதம் இதன் முதல் கூட்டம் நடந்தது. அதிக இடங்களை சாகுபடி நிலங்களாக மாற்றி பாசன வசதி செய்வதற்கு இந்த வாரியம் உதவும் என்றும் அமைச்சர் கூறினார்.

திண்டுக்கல்லில் உதவி நிர்வாகப் பொறியாளர் அலுவலகம் திறக்கப்படும். டிராக்டர்களை விவசாயிகளுக்கு குறைந்த வாடகைக்கு கொடுக்க இந்த அதிகாரி உதவுவார் என்றும் அமைச்சர் காளிமுத்து கூறினார்.


பாங்க் ஆப் மதுரை
தனது வாடிக்கையாளர்களுக்கும் பொதுமக்களுக்கும்
★ வாழ்த்தையும், நன்றியையும் ★
இந்நன்னாளில் தெரிவித்துக்கொள்கிறது!

31-12-1981 ல் இருப்புத்தொகை (டெபாசிட்): ரூ. 136 கோடிக்கு மேல்
கடன் வழங்கிய தொகை (அட்வான்ஸ்) ரூ. 100 கோடிக்கு மேல்

பாங்க் ஆப் மதுரை லிட்.
(பாரதத்தில் மிகப்பெரிய ஷெடியூல்டு வங்கி)

பதிவு அலுவலகம்:
33, வடக்கு சித்திரை வீதி, மதுரை-625001.

மத்திய அலுவலகம்:
758, அண்ணா சாலை, : : சென்னை-600002.

வளரும் வங்கியில் வளர்ச்சி பெறுங்கள்!
— இராம. முத்தையா, தலைவர்



# தமிழ்நாடு தொழில் முன்னேற்ற நிறுவனம்

(சிப்காட்) அளிக்கும்



## இனிய பொங்கல் வாழ்த்துக்கள்!

✻✻✻✻✻✻✻✻✻✻✻✻✻

'தை பிறந்தால் வழி பிறக்கும்'



தொழில் நிறுவனம் அமைப்போர்களுக்கு
சிப்காட் அளிக்கும் சிறப்பு சலுகைகள்:

1. நீண்ட தவணைக் கடன்கள்
2. புதிய தொழில் முயற்சியாளர்களுக்கு ஆரம்ப முதலீட்டு உதவி
3. பங்குகள் விற்பனைக்கு உத்திரவாதம்
4. முதலீட்டுத் தொழில் வாய்ப்பு ஆய்வுக்காக 50% மான்யம்
5. ரூ. 100 லட்சம் வரை, வட்டியின்றி விற்பனை வரிக் கடன்
6. மத்திய மாநில அரசுகளின் 15% முதலீட்டு மான்யம்
7. 8 மாவட்டங்களில் சிப்காட்டின் தொழில் இணையங்களில் பண்படுத்தப்பட்ட தொழில்மனைகள்.
8. குறிப்பிட்ட 5 தொழில் இணையங்களில் ஆரம்பிக்கப்படும் தொழிற்சாலைகளுக்கு 5 ஆண்டுகளுக்கு மின் வெட்டிலிருந்து விலக்கு.

இதர விபரங்களுக்கு :-

தமிழ்நாடு தொழில் முன்னேற்ற நிறுவனம் (சிப்காட்)
51-52, கிரீம்ஸ் சாலை, சென்னை-600 006
தொலைபேசி: 88261: டெலக்ஸ்: 7736



# தமிழ்நாடு கனிம நிறுவனம்




(தமிழ்நாடு அரசுடைமை நிறுவனம்)
குடிநீர் மற்றும் வடிகால் வாரிய கட்டிடம்,
சேப்பாக்கம், சென்னை-5

நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குத் தொழில்வளம் அடிப்படை. தொழில் வளர்ச்சிக்கு கனிம வளம் அடிப்படை. தரமான கனிமங்களை அறிவியல் முறையில் வெட்டியெடுத்து தொழில்களுக்கு மூலப்பொருளாக அளிக்கிறது தமிழ்நாடு கனிம நிறுவனம்.

உலகப்புகழ்பெற்ற கரும்பாறைகளையும், சாம்பல்நிறப் பாறைகளையும் ஜப்பான், இங்கிலாந்து, மேற்கு ஜெர்மனி முதலிய வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்து உலகச்சந்தையில் ஒரு உன்னத இடத்தைப் பிடித்துள்ள தமிழ்நாடு கனிம நிறுவனம் கீழ்க்கண்ட உயர்வகைக் கனிமங்களையும், கனிமத் தொழிற்சாலைகளுக்கு விற்பனை செய்து வருகிறது:

| | |
|---|---|
| சுண்ணாம்புக்கல் | கெமிக்கல்கிரேடு + 93 சதவிகிதம் $CaCo_3$ |
| வெங்கக்கல் (குவார்ட்ஸ்) | + 99 8 சதவிகிதம் $Sio_2$ |
| பெல்ட்ஸ்பார் | + 12 சதவிகிதம் $K_2o$ |
| ரோஸ் குவார்ட்ஸ் | ஆபரணங்கள் செய்யும் தரம் உடையவை |
| வெர்மிகுலைட் மைக்கா | சராசரியாக 14 மடங்கு கன பரிமாணம் விரிவடையும் தன்மையுடையது |
| சிலிகா மணல் | + 99.0 சதவிகிதம் $Sio_2$ |
| வெப்பம் தாங்கும் களிமண் | ரிப்ராக்டரி கிரேடு |

தரமுள்ள கனிமங்களுக்கு அன்பு கூர்ந்து
தமிழ்நாடு கனிம நிறுவனத்தை அணுகவும்.

DIPR-228-82-10

பொங்கலுக்கு
சுவையூட்டும்
இராமகிருஷ்ணாவின்
இனிப்புகள்!

RK
ராமகிருஷ்ணா லஞ்ச் ஹோம்
223, நேதாஜி சுபாஷ் சந்திர போஸ் சாலை.
சென்னை 600 001. போன்: 22154

போர் மறுப்பு ஒப்பந்தம்:

# இந்திய கருத்துக்கு ஆதரவு தெரிவித்து பாகிஸ்தான் கடிதம்

புதுடெல்லி, ஜன. 13— போர் மறுப்பு ஒப்பந்தம் குறித்து இந்தியா தெரிவித்த கருத்துக்கள் பெரும்பாலானவை ஏற்கத் தக்கவையே என பாகிஸ்தான் தெரிவித்துள்ளது.

இந்தியாவிற்கும் பாகிஸ்தானுக்கும் இடையே போர் மறுப்பு ஒப்பந்தம் ஒன்றை செய்து கொள்ளலாம் என பாகிஸ்தான் தெரிவித்திருந்தது.

இதை ஒட்டி இந்தியா போர்மறுப்பு ஒப்பந்தம் என்பது சிம்லா ஒப்பந்த அடிப்படையில் இருக்கவேண்டும் என்றும் மற்றும் பல்வேறு கருத்துக்கள் குறித்தும் பாகிஸ்தான் அரசுக்கு கடிதம் எழுதியிருந்தது.

இக் கடிதத்திற்கு பாகிஸ்தான் அரசு தற்போது பதில் அனுப்பியுள்ளது.

இக்கடிதத்தில், இந்தியா தெரிவித்துள்ள கருத்துக்களில் பெரும்பாலானவை ஏற்கத் தக்கதாகவுள்ளதாக தெரிவிக்கப்பட்டுள்ளது.

மற்றும் சில கருத்துக்கள் குறித்து இரு நாடுகளும் பேச்சு வார்த்தை நடத்தி முடிவு செய்யலாம் எனவும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்தியாவில் உள்ள பாகிஸ்தான் தூதர் அப்துல் சத்தார் இக்கடிதத்தை இந்திய வெளி விவகாரத் துறை அமைச்சர் பி. வி. நரசிம்மாராவிடம் கொடுத்தார்.

## பாகிஸ்தானில் பத்திரிக்கை தணிக்கை ரத்து

இஸ்லாமாபாத், ஜன.13— கடந்த 27 மாதங்களாக பாகிஸ்தான் நாட்டில் அமுலில் இருந்த தினசரி பத்திரிகைகள் மீதான தணிக்கை முறையை அதிபர் ஜியா-உல்-ஹக் ரத்து செய்தார்.

என்றாலும் வார, மாத பத்திரிகைகள் மற்றும் அரசியல் பத்திரிகைகள் மீதான செய்தி தணிக்கை தொடர்ந்து நீடிக்கும் என்றும் ஜியா-வுல் ஹக் தெரிவித்தார்.

பத்திரிகைகள் தமக்கு தாமே சுய தணிக்கை செய்துகொள்ள வேண்டும் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

ரூ. 3 லட்சம் மதிப்புள்ள

## சிலைகள் திருட்டு: வாலிபர் கைது

சென்னை, ஜன. 13— சென்னை லிங்கிச்செட்டித் தெருவிலுள்ள மல்லிகேஸ்வரர் ஆலயத்தின் பூட்டை உடைத்து துணிகரமான திருட்டு நடந்துள்ளது. அந்த ஆலயத்துக்கு சொந்தமான ரூ. 3 லட்சம் மதிப்புள்ள சிலைகள் கடந்த 8ந்தேதி திருடுபோயின.

இது தொடர்பாக போலீசார் ஒரு வாலிபரைக் கைது செய்து விசாரித்து வருகின்றனர்.

இந்த ஆலயத்துக்குச் சொந்தமான 63 நாயன்மார்கள் சிலை, பரவை நாச்சியார் சிலை, வெள்ளிக்கவசம் உள்பட ரூ. 3 லட்சம் மதிப்புள்ள சிலைகள் திருடு போயின.

இது சம்பந்தமாக வடக்கு கடற்கரை குற்றப் பிரிவு போலீசார் தீவிர விசாரணை செய்து ஒரு வாலிபரைமடக்கிப்பிடித்து சிலைகளைக் கைப்பற்றினர்.

அவரதுபெயர் எத்திராஜ். வயது 29. இவர் வியாசர்பாடியைச் சேர்ந்தவர். நேற்றுகாலை வியாசர்பாடியிலிருந்து சென்டிரலுக்கு இவர் ஆட்டோவில் சென்று கொண்டிருந்த போது அவரைப் போலீசார் மடக்கிப் பிடித்தனர்.

அவர் கொடுத்த தகவலின்பேரில் கோவில அருகேயிருந்த தார் டிரம்மில் வைத்திருந்த ஒரு சிலையைப் போலீசார் கைப்பற்றினார்கள்.

திருடுபோன அந்த ஆலய சிலைகள் 200 ஆண்டுகளுக்கு முன்பு செய்யப்பட்டவை ஆகும.

இதுசம்பந்தமாகப் போலீசார தீவிர புலன் விசாரணை செய்து வருகின்றனர்.

## மறைவு

உடல் நலக் குறைவால் சென்னை பொது மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டிருந்த சென்னை 58-வது வட்ட கழக செயலாளர் த. மகிழன்பனின் தந்தையார் எஸ். தபும் மறைவு எய்தினார். இறுதிச் சடங்குகள் மூலகொத்தளம் சுடுகாட்டில் நடந்தன.

தமிழக மக்களின்
நன்றிகரில்லா தலைவர்
எங்களின்
இதய தெய்வம்,
மாண்புமிகு,
புரட்சித்தலைவர்
அவர்களுக்கும்
மாண்புமிகு
அமைச்சர்பெருமக்களுக்கும்
கழக பொதுச்செயலாளர் அவர்களுக்கும் மறறும
கழக, எம். ஜி. ஆர். மன்ற மறவர்களுக்கும்
எனது பொங்கல் நல்வாழ்த்துக்களை தெரிவித்துக்கொள்கிறேன்.

இவண்,
தங்கள் தொண்டன்,
மு. க. மெய்ஞானம்
நகர செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

குடியாத்தம்.
தொலைபேசி எண்: 295

அலங்கார் A/C
பகல் 11-30 மணி
லிட்டில் ஆனந்த் A/C 1,4,7,10
பால அபிராமி A/C
12-15, 3-15, 6-30, 9-45
ஸ்ரீகிருஷ்ணா
3 காட்சிகள்
AVM ராஜேஸ்வரி A/C
12-15 3-00 6-30 10-00

இன்று முதல் (14-1-82)
ஏவிஎம் மின்
போக்கிரி ராஜா
SP. முத்துராமன்
AVM PRODUCTIONS
எம்.குமரன் எம்.சரவணன் எம்.பாலசுப்ரமணியன்



# சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்

பதிவுபெற்ற அலுவலகம்: தபால் பெட்டி எண் 4502,
180, மவுண்ட் ரோடு, சென்னை 600 006

## பிக்ஸட் டெபாசிட் திட்டம்

மூன்று வருடங்களுக்கான டெபாசிட்டுகளுக்கு வட்டி விகிதம் 1.1.1982 முதல் கீழ்கண்டவாறு உயர்த்தப்பட்டுள்ளது.

டெபாசிட்டுகளுக்கு ஆண்டு வட்டி

ஒரு வருடம் 12% இரண்டு வருடங்கள் 13% மூன்று வருடங்கள் 14½%

இவ்வாறு, மூன்று வருடங்களுக்கான டெபாசிட்டுகளுக்கு உயர்த்தப்பட்ட வட்டி விகிதம் எங்களிடம் 1.1.1982இல் இருக்கும் டெபாசிட்டுகளுக்கும், மற்றும் அந்த தேதிக்குப் பிறகு புதுப்பிக்கப்படும் மூன்று வருட டெபாசிட்டுகளுக்கும் பொருந்தும்.

வட்டித்தொகை காலண்டர் ஆண்டில் இருமாதங்களுக்கொருமுறை அளிக்கப்படும்.

டெபாசிட்டுகள் குறைந்தது ரூ. 3000/-மும், அதற்குமேல் முழு ரூ. 1000/-களாகவும் ஏற்றுக்கொள்ளப்படும்.

விரிவான விதிமுறைகள் மற்றும் விபரங்களைக்கொண்ட விண்ணப்ப நமூனக்களை கம்பெனியின் டெபாசிட் டிபார்ட்மெண்ட், 'ஆர்த்தி சேம்பர்ஸ்', 3வது மாடி, 189, மவுண்டு ரோடு, சென்னை-600006இல் பெறலாம். விண்ணப்ப நமூனக்களை கம்பெனியின் பதிவுபெற்ற அலுவலகத்திலிருந்தும், அதனுடைய கீழே குறிக்கப்பட்டுள்ள ஏதாவதொரு அலுவலகத்திலிருந்தும் பெறலாம்.

பாங்குகள் அல்லாத பைனான்ஸ் கம்பெனிகளுக்கான ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் கட்டளைக்குட்பட்டு டெபாசிட்டுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

பாங்குகள் அல்லாத பைனான்ஸ் கம்பெனிகள் மற்றும் பலதரப்பட்ட பாங்குகள் அல்லாத கம்பெனிகள் (விளம்பரம்) விதிகள் 1977இல் குறிப்பிட்டுள்ளபடி கொடுக்கவேண்டிய விபரங்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன:

அ) கம்பெனியின் பெயர் — சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்

ஆ) கம்பெனி நிறுவப்பட்ட தேதி — ஆகஸ்டு 11, 1954

இ) கம்பெனி நடத்தும் அலுவல்கள், கிளைகள்பற்றிய விவரங்களுடன் — மோட்டார் வண்டிகளுக்கும், இயந்திரங்களுக்கும் தவணைமுறைப் பண உதவி அளித்தல், இயந்திர சாதனங்களை குத்தகைக்கு அளித்தல். பிரதானமாக போக்குவரத்து வாகனங்களுக்குத் தவணைமுறைப் பண உதவி அளித்தல். கிளைகள்/அலுவலகங்கள்: பங்களூர், பெல்லாரி, கள்ளிக்கோட்டை, கண்ணனூர், கோயம்புத்தூர், எர்ணாகுளம், ஹூப்ளி, கோட்டயம், கர்னூல், மதுரை, மைசூர், நெல்லூர், பாண்டிச்சேரி, கொல்லம், ராஜமந்திரி, சேலம், செகந்திராபாத், திருநெல்வேலி, திருச்சூர், திருச்சி, திருவனந்தபுரம், விஜயவாடா மற்றும் விசாகப்பட்டினம்.

ஈ) கம்பெனி நிர்வாகம் பற்றிய சுருக்கமான விவரங்கள் — டைரக்டர்கள் குழுவின் மேற்பார்வையில் நிர்வாக டைரக்டரால் நிர்வகிக்கப்படுகின்றது.

உ) டைரக்டர்கள் பெயர்கள், முகவரிகள் மற்றும் தொழில் விவரங்கள்:

| பெயர் | முகவரி | தொழில் |
|---|---|---|
| திரு டி.எஸ். சந்தானம் (டைரக்டர்கள் குழுவின் சேர்மன்) | "கோபால் பாக்" 180, மவுண்ட் ரோடு, சென்னை-600 006 | தொழிலதிபர் |
| திரு டி.எஸ். ராகவாச்சாரி | 53, முதல் மெயின் ரோடு, ராஜா அண்ணாமலைபுரம், சென்னை-600 028 | ஓய்வுபெற்ற பாங்கு அதிகாரி |
| திரு ஜி. வெங்கடேஸ்வர அய்யர் | 2, ஆறுவது கிராஸ் தெரு, சி.ஐ.டி. காலனி சென்னை-600 004 | ஓய்வுபெற்ற ஐ.சி.எஸ் அதிகாரி |
| திரு என்.இ.எஸ். ராகவாச்சாரி ஐ.சி.எஸ். (ரிடையர்டு) | பிளாட் நெ. 62, முதல் அவின்யூ, இந்திராநகர், சென்னை-600 020. | ஓய்வுபெற்ற அரசாங்க அதிகாரி |
| திரு ஆர்.கே. சேஷாத்திரி | 71, பச்சையப்பன் ஹாஸ்டல் ரோடு, மெக்னிக்கல்ஸ் ரோடு எதிரில், சென்னை-600 031 | ஓய்வுபெற்ற அரசாங்க அதிகாரி |
| திரு வி. நம்பி | 11, பீமண்ண முதலி கார்டன் தெரு, ஆழ்வார்பேட்டை, சென்னை-600 018 | கம்பெனி டைரக்டர் |
| திரு டி.ஏ. திருவேங்கடாச்சாரி | 17, முதல் மெயின் ரோடு சி.ஐ.டி. காலனி, சென்னை-600 004 | கம்பெனி டைரக்டர் |
| திரு டி.என். பத்மநாபன், எம்.ஏ.,பி.எல். (நிர்வாக டைரக்டர்) | 4, பசுல்லா ரோடு, தி.நகர், சென்னை-600 017 | தொழிலதிபர் |

ஊ) & எ) இந்த விளம்பர தேதியிலிருந்து முந்தைய மூன்று வர்த்தக ஆண்டுகளில் லாப விவரங்களும் (வரிக்கு ஒதுக்கு முன்பும், பின்பும்) மற்றும் அந்த ஆண்டுகளில் கம்பெனியால் அறிவிக்கப்பட்ட டிவிடெண்டுகளும்:

| லாபம்/டிவிடெண்டு அளிக்கப்பட்ட ஆண்டு முடிவு | லாபம்-வரிக்கு ஒதுக்குமுன் (ரூபாய் இலட்சங்களில்) | லாபம்-வரிக்கு ஒதுக்கியபின் (ரூபாய் இலட்சங்களில்) | அறிவிக்கப்பட்ட டிவிடெண்டு |
|---|---|---|---|
| 31.12.1978 | 195.84 | 77.34 | 18% |
| 31.12.1979 | 162.88 | 70.78 | 18% |
| 31.12.1980 | 240.15 | 91.15 | 20% |

ஏ) தணிக்கையான கடைசி இரு பாலன்ஸ் ஷீட்டுகளின்படி கம்பெனி நிதி நிலைமையின் சுருக்கமான விவரங்கள்:
(ரூபாய் இலட்சங்களில்)

பொறுப்புகள்

| | டிசம்பர் 31ந் தேதியில் 1980 ரூ. | 1979 ரூ. |
|---|---|---|
| செலுத்தப்பட்ட மூலதனம் | 200.00 | 200.00 |
| ரிசர்வுகள் மற்றும் அதிகப்படிகள் | 226.70 | 172.26 |
| ஈடுபெற்ற கடன்கள் | 785.48 | 540.67 |
| ஈடுபெறாத கடன்கள் | 2627.92 | 2170.47 |
| இப்போதுள்ள செலவினங்களும், ஒதுக்கீடுகளும் | 1780.50 | 1561.49 |
| | 5620.60 | 4644.89 |

சொத்துக்கள்

| | டிசம்பர் 31ந் தேதியில் 1980 ரூ. | 1979 ரூ. |
|---|---|---|
| நிலையான சொத்துக்கள் | 53.61 | 53.95 |
| முதலீடுகள் | 52.74 | 52.74 |
| தற்போது உபயோகத்திலுள்ள சொத்துக்கள் | 5277.35 | 4133.64 |
| கடன்களும், அட்வான்சுகளும் | 236.90 | 404.56 |
| இதர செலவினங்கள் | — | — |
| லாப நஷ்ட கணக்கு | — | — |
| | 5620.60 | 4644.89 |

| குறிப்பு: தற்செயலாக ஏற்படக்கூடிய பொறுப்புகளின் சுருக்கமான விவரங்கள்: | 1980 ரூ. | 1979 ரூ. |
|---|---|---|
| (i) கேபிடல் அக்கௌன்ட்டில் ஏற்றுக்கொண்டு இதுவரை நிறைவேற்றாத காண்டிராக்ட்டுகளின் தொகை, ஒதுக்கீடு செய்யப்படாதவை | 89,769 | 66,141 |
| (ii) பாங்குகளில் டிஸ்கௌன்ட் செய்யப்பட்டு பாங்குகளால் பாலன்ஸ் ஷீட் தேதியில் வசூலிக்கப்படாத செக்குகள் | 21,43,983 | 8,44,685 |
| (iii) பாங்குகளுக்குக் கொடுத்த எதிர் காரண்டிகள் | 6,07,600 | 5,66,600 |
| (iv) கம்பெனியால் கடனாக ஒத்துக்கொள்ளாத, கம்பெனிக்கு எதிராக உரிமை கொண்டாடப்பட்டவை | 48,000 | 1,12,850 |
| (v) கம்பெனியால் கோர்ட்டுகளுக்குச் சாதகமாகக் கொடுத்திருக்கும் இன்டம்னிடி பாண்டுகள்— அப்பீல்கள் செய்வதற்கு ஒரு முன்மாதிரி வரையீடு | 6,250 | 11,865 |

ஐ) (i) ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் கட்டளைகளின்படி டெபாசிட்டுகள் மூலம் கம்பெனி எழுப்பக்கூடிய மொத்தத் தொகை — ரூ. 42.67 கோடிகள்

(ii) 31.12.80இல் உள்ள டெபாசிட்டுகளின் மொத்தம் — ரூ. 26.28 கோடிகள்

ஒ) உரிமை கொண்டாடாத டெபாசிட்டுகளைத் தவிர கம்பெனியில் முடிந்துபோன டெபாசிட்டுகள் வேறெதுவும் கிடையாது.

ஓ) மேலும்

(i) ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் கட்டளைகளில் பின்பற்ற வேண்டிய பொருத்தமான ஷரத்துகளை கம்பெனி [illegible]

(ii) மேற்படி கட்டளைகளைக் கம்பெனி நிறைவேற்றியிருப்பதானது டெபாசிட்டுகளைத் திருப்பித் தருவதற்கு ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியா உத்திரவாதம் கொடுப்பதாக ஆகாது.

(iii) கம்பெனி ஏற்றுக்கொண்ட டெபாசிட்டுகள் ஈடுபெறாதவை; மற்றும் இவை ஈடுபெறாத ஏனைய கடன்களுடன் சமமாகப் பாவிக்கப்படும் என்று அறிவிக்கப்படுகிறது.

டைரக்டர்கள் குழு ஆணைப்படி
சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்டிற்காக
எஸ். ராகவன்
பைனான்ஸியல் கண்ட்ரோலர் & செக்கரட்டரி

சென்னை
டிசம்பர். 9, 1981

மேற்குறித்த விளம்பரம் கம்பெனியின் டைரக்டர்கள் குழுவின் அதிகாரப்படி அவர்கள் பெயரால் வெளியிடப்படுகிறது. டிசம்பர் 9, 1981 அன்று டைரக்டர்கள் குழு இந்த வாசகத்தைத் தீர்மானித்ததுடன், திரு எஸ் ராகவன் அவர்கள் கையொப்பம் இட அதிகாரம் அளித்தது. இந்த விளம்பர வாசகம், டைரக்டர்கள் குழுவினரால் அங்கீகரிக்கப்பட்டு ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவில் தாக்கல் செய்யப்பட்டுள்ள ஆங்கில விளம்பர வாசகத்தின் தமிழாக்கம் ஆகும்.